உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிவாலய வழிபாட்டுத் திருமுறைத் திரட்டு

ஆசிரியர் :

ஆ. சுப்பிரமணியன்

முன்னாள் தலைமை மின்பொறியாளர்

தமிழ்நாடு மின் வாரியம், சென்னை.

அருட்சுடர் முத்துலிங்க ரெட்டியார் அவர்கள்

88-ஆம் ஆண்டு விழா வெளியீடு

அப்பர் அருள்நெறிப் பதிப்பகம்

சென்னை-600 041.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

காஞ்சிபுரம் தொண்டைமண்டல ஆதீனம்
குருமகா சந்நிதானம்
சீலஸ்ரீ ஞானப்பிரகாச சுவாமிகள் அருளிய

# ஆசியுரை

ஆக்கையாற் பயனென்-அரன் கோயில் வலம் வந்து,
பூக்கையா லட்டிப் போற்றிஎன் னாதவிவ், வாக்கையாற்
பயனென்
கால்களாற் பயனென்-கறைக்கண்டனுறை கோயில்,
கோலக்கோபுரக் கோகரணஞ்சூழாக் கால்களாற் பயனென்
—அப்பர்

மக்கட் சமுதாயம் இன்பமாக வாழவேண்டுமானால் அனைவரும் பரந்த மனப்பான்மையோடு பிறர் நலத்தைப் பேணி வாழ்வதைத் தவிர வேறு வழி இல்லை. ''நான்—எனது'' என்னும் செருக்குகள் குறையக் குறைய உயிரினங்களை அன்புடன் நேசிக்கத்தக்க பண்பட்ட உள்ளம் தோன்றும், இதனை நன்குணர்ந்த பண்டைப் பெருமக்கள் வாழ்க்கையோடு சமயத்தையும் இணைத்து வாழ்ந்து காட்டினர். இதன் பயனே இறையுணர்வு.

இறையுணர்வும் சிந்தனையும் மனிதன் மனத்தகத்தே அரும்பிடினும், அவை மலர்தல் வேண்டுமன்றோ? அதற்காகவே வானளாவிய ஆலயங்களை நம்முன்னோர் எழுப்பினர். தமிழ்நாட்டில் மட்டும் 35,000-க்கும் மேற்பட்ட திருக்கோயில்கள் இருப்பதாக அரசு அறிக்கையே தெரிவிக்கிறது. இந்த சிறப்பு உலகில் வேறு எந்த நாட்டிலும் காண முடியாத ஒன்று. இத்திருக் கோயில்களின் சிறப்பைத் திருமுறைப் பாடல்கள் மூலம் வேத-சிவாகம அடிப்படையில் விளக்க எழுந்ததே இந்நூல்.

கோபுரத்தைத் தூரத்தே கண்டதும் அதனை இறைவனது தூலத்திருமேனியாகக்கொண்டு சிரமேல் கைகூப்பி, வணங்க வேண்டும் என்பதையும், கோபுரத்தை அடைந்ததும் எட்டு அங்கங்களும் நிலந்தோய வணங்கவேண்டும் என்பதையும் திருஞானசம்பந்தப்பெருமான் வரலாற்றிலிருந்தே சான்று காட்டியிருப்பது பெரிதும் பாராட்டுதற்குரியது.

கோபுரத்தின் மேற்பகுதி-நடுப்பகுதி-அடிப்பகுதி-இறைவன் அணிந்திருக்கும் பாம்பு இவைகள் தத்துவ அடிப்படையில் விளக்கப் பெற்றுள்ளன. பிரகாரங்களை வலம்வரும் முறையும் பயனும், இடபதேவர், கொடிமரம் பலிபீடம், விநாயகர், முருகன், சிவலிங்கத் திருமேனியைச் சதாசிவ வடிவாக வழிபடும் முறை, சந்திரசேகரர், சோமாஸ்கந்தர், தென்முகக் கடவுள், கூத்தப் பிரான் முதலிய மூர்த்தங்களின் தத்துவங்களும் விரிவாகப் பேசப் பெற்றுள்ளன. சமயக்குரவர்கள், அறுபான்மும்மை நாயன் மார்கள், சேக்கிழார் ஆகிய மூர்த்திகளுக்குரிய தோத்திரப் பாடல் களும் குறிக்கப் பெற்றுள்ளன. கூத்துவகை பற்றிய விளக்கங்களும், சோமாஸ்கந்தர் பெயர் விளக்கமும், தென்முகக் கடவுளது சின் முத்திரைப் பொருளும், பெருங்கோயில், இளங்கோயில் முதலிய பல்வகைக் கோயில்கள் விளக்கமும், இன்ன பிறவும் தெய்வத் திருமுறைகள் மூலம் விளக்கப் பெற்றுள்ளன. அம்பிகை கோயில் வழிபாட்டில் எண்வகைச் சத்திகள், எண்குணமூர்த்திகள் பற்றிய விளக்கமும் இறுதியாக பைரவ வழிபாடும் பேசப்பெறுகிறது.

சுருங்கக்கூறின் சிவாலய வழிபாடு பற்றி இத்தகைய தத்துவ விளக்கத்துடன் கூடிய ஒரு நூல் இதுவரை வெளிவரவில்லை எனலாம். மேலும் சைவசமய வளர்ச்சிக்கு இதுபோன்ற ஒருநூல் இந்நாட்களில் மிக மிக வேண்டற் பாலதும் ஆகும்.

இந்நூல் ஆசிரியரது இருமொழிப் புலமையும் நுண்மாண் நுழை புலமும், திருமுறைகள், ஆகமங்கள், அருணகிரிநாதர், குமரகுரு தாஸர் போன்ற அருளாசிரியர் வாக்குகள் ஆகியவற்றில் இவரது அறிவு பரந்து, விரிந்து தோய்ந்துள்ள நிலைமையும், பத்திமையும் எதையும் ஆதாரத்துடன் நிறுவிக் காட்டும் ஆற்றல், அவற்றை விளக்கச் செய்யும் முறை முதலியனவும் பெரிதும் பாராட்டுக் குரியன.

தமிழக அரசு மின்வாரியத்தில் முதன்மைப் பொறியாளர் பதவியிலிருந்து ஓய்வுற்றுள்ள இவ்வாசிரியர், சமயத் துறையில் இத்தகைய விழுமிய நோக்கும் செயலும்கொண்டு இந்நூலை யாத்திருப்பது, இதனைப் பெற்றுப் பயன்பெறுவோரின் முன்னைய நல்வினைப் பயனே எனலாம். இவ்வகையில் இவரைத் திருமுறை களில் ஈடுபடச் செய்துள்ள நிலை, பெரிய புராணப் பேருரை ஆசிரியர்—வழக்கறிஞர் சிவக்கவிமணி C. K. சுப்பிரமணிய முதலி யார் (ஸ்ரீமத் சம்பந்த சரணாலயத் தம்பிரான் சுவாமிகள்) அவர் களிடம் இவரது தந்தையாரும் இவரும் கொண்டிருந்த தொடர்பு பற்றியதே ஆகும்.

அறச்சுடர்-சைவத்திரு. க மூத்துலிங்க ரெட்டியார் அவர்கள் இளமை முதலே வளமார்ந்த வாழ்க்கையர்; கயப்பாக்கம் செமீந் தார்; மாம்பாக்கம் குருகுல ஆக்கத்திற்கு ஆன்ற துணையாக நின்று வருபவர்; மதுராந்தகம் உயர்நிலைப்பள்ளித் தோற்றத்திற்கும், வளர்ச்சிக்கும் காரணர்; காந்திய வாழ்க்கையர்; தெய்வச் சேக்கிழார் பெருமானிடத்துப் பேரன்பு பூண்டவர்; சைவ சமயத் திருத்தொண்டிற்கெல்லாம் பெருந் துணையாக இருப்பவர்; நல்லோர் பல்லோர் நயந்து நட்புறும் சார்பினர். இத்தகைய சீர்சான்ற பெருந்தகையாரின் 88-ஆம் பிறந்தநாள் மலராக இந்நூல் வெளிவருவது சாலச்சாலப் பொருத்தமுடையதே!

அறச்சுடர் அவர்களும், நூல் ஆசிரியர் அவர்களும் அனைத்து நலன்களுடன் நீடினிது வாழவும், இவ்விரு பெருமக்களின் நன் முயற்சியால் மேலும் இதுபோன்ற பல நூல்கள் வெளிவரவும் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

சிவம்

# அணிந்துரை

கோ. மு. முத்துசாமி பிள்ளை, (ஐ.ஏ.எஸ். ஓய்வு)

உலகினில் பிறந்தவர்கள் எய்த வேண்டுவது இவ்வுலகில், மாணிக்கவாசகர் குறிப்பிடுவது போன்று, ''மீட்டிங்கு வாராத'' (பிறவாத) நிலையாகும். இத்தகைய பிறவாத நிலை எய்துதற்கு வழிமுறைகளைத் திருநாவுக்கரசு நாயனார் நமக்குக் காட்டுகிறார். இவ்வழிமுறைகளை,

''திருநாமம் அஞ்செழுத்தும் செப்பாராகில்
தீவண்ணர் திறம் ஒருகால் பேசாராகில்
ஒருகாலும் திருக்கோயில் சூழாராகில்
உண்பதன்முன் மலர் பறித்திட்டு உண்ணாராகில்
அருநோய்கள் கெட வெண்ணீ(று) அணியாராகில்
அளியற்றார் பிறந்தவாறு ஏதோ என்னில்
பெருநோய்கள் மிகநலியப் பெயர்த்தும் செத்துப்
பிறப்பதற்கே தொழிலாகி இறக்கின்றாரே''

என்னும் திருத்தாண்டகத்தில் காணலாம்.

''இந்நிலவுலகில் பிறந்துவிட்டோம். பிறந்துவிட்டால் இறவாதிருக்க வேண்டும். இது எப்படியோ (வழி கூறுகிறேன். கேளுங்கள்) அறமார் தில்லைச் சிற்றம்பலவன் அடிக்கமலம் மறவா திருந்திடுக. இதுவே நன்மருந்து'' என்றும் அருளுரை வழங்கு கிறார் பட்டினத்தடிகள். ஒருவர் இறந்த பின்னர் அவருக்குப் பிறப்பு இருக்குமானால் அவருக்கு நேரிட்ட இறப்பு இறப்பே ஆகும். ஆனால் ஒருவர் இவ்வுலகிலிருந்து மறைந்த பின்னர் அவருக்கு பிறப்பு இல்லையெனில், அவரது மறைவு இறப்பு அன்று. மற்றும் அத்தகையவர் இவ்வுலகினில் நீண்ட காலம் வாழ்ந்து சிவபெருமான் திருவருளில் நிறைந்து வாழ்வார்.

இத்தகைய நெறிமுறையைப் பின்பற்றி மிக நீண்டகாலம் வாழ்வதற்கு உரியவர் அருட்சுடர் முத்துலிங்க ரெட்டியார் அவர்கள். சிவபெருமான் திருநாமமாகிய ஐந்தெழுத்துத் தூல பஞ்சாட்சரமாகிய ''நமச்சிவாய'' மந்திரத்தை அவர் தமது தாய் மொழியாகிய தெலுங்கில் ''செப்பு'' ''செப்பு'' எனக் கூறுவதைக் குறிப்பதுபோன்று மேலே குறிப்பிடப் பெற்றுள்ள திருத்தாண்ட கத்தில் ''செப்பாராகில்'' என்னும் தொடர் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது.

அருட்சுடர் முத்துலிங்க ரெட்டியார் அவர்கள் திருமகளது அருள் நோக்கமும் பெற்றவர்; அவர் செல்வச் சீமான் ஆவார்; கூட்டுறவு இயக்கங்களில் பெரும் பங்கு ஏற்றவர்; செங்கற்பட்டு மாவட்டக் கழகத்தின் துணைத் தலைவராகச் சீரிய பணி

ஆற்றியவர்; கல்வித் துறையில் பெரும்பணி ஆற்றியவர்; இரு பெரும் பள்ளிகளை இனிய முறையில் இயக்கி வருபவர். திருக் கோயில்களை அமைத்தும், சீர் செய்தும் ''அருட்சுடர்'' என்ற பட்டம் பெற்றவர். இத்தகைய அருங்குணங்கள் அணியுற அமையப்பெற்ற அருட்சுடரின் 88-ஆம் ஆண்டு விழா இந்நாளில் நடைபெறுகிறது. இவ்விழா இவர்களது நன்மைக்கு மட்டுமன்று. இவ்விழாவில் கலந்துகொண்டு, இவரை மனமார வாழ்த்து வோர்கள், இப்பெரியாரிடத்தும் தெய்வ வழிபாட்டிலும், கோயிற் பூசைகளிலும் பெரிதும் ஈடுபடுவதால் அவர்களும் நலங்கள் பல எய்துவார்கள் என்பது திண்ணம்.

அரிதினுக்கு அரிதாக நடைபெறும் பெருந் தொண்டர்களுக்கு இடையே கோயில் வழிபாட்டு நூல் வெளியிடப் பெறுவது சாலப் பொருத்தமாகும்.

அயர்ந்து பணி புரிந்துவரும் நாம் அடையக்கூடிய சோர்வி லிருந்து விடுதலை பெறல் நிமித்தம் கோயிலுக்குச் சென்று திரும்புவது என்னும் கொள்கைக்கு முற்றுப்புள்ளி வைத்து, நம் இல்லத்திலிருந்து புறப்பட்டுத் திருக்கோயிலைக் கண்டு வணங்கி, அக்கோயில்களில் எழுந்தருளிய மூர்த்தங்களை, பெரும் பயன் அளிக்கும் மந்திரப் பாடல்களாகிய திருமுறைப் பாசுரங்களைக் கொண்டு துதித்து வழிபடும் முறைகளையெல்லாம் இந்நூல் எடுத்துக் காட்டுகிறது. இவ்வளவு அரிய கோட்பாடுகள் சைவ நூலில் இருக்கின்றனவா எனப் பலரும் வியக்கும் வகையில் இந்நூல் எழுதப்பெற்றுள்ளது. இந்நூலை எழுதிக் கொடுத்தவர் திருவாளர் ஆ. சுப்பிரமணியம் அவர்கள். தமிழ்நாட்டு மின்வாரி யத்தின் முன்னாள் தலைமைப் பொறியாளர். ஆன்றடங்கிய பெரியவர். இளம் வயதிலே சிவக்கவிமணி சி. கே. சுப்பிரமணிய முதலியார் தொடங்கிய தேவார இசைப் பள்ளியில் திருமுறைப் பாடல்களைக் கற்றவர். சைவ சித்தாந்தம் நன்கு பயின்று வருபவர். இவர் எழுதித்தந்த நூல் சிறந்த முறையில் அமைந் துள்ளது. இது சிவாலய வழிபாட்டுக்கன்றி இல்லங்களில் செய்யப் பெறும் வழிபாட்டுக்களுக்கும் உரியது.

இந்நூலை, தம் 88-ஆம் ஆண்டு விழாவில் வெளியிட்டு உதவும் அருட்சுடர் முத்துலிங்க ரெட்டியார் அவர்கள் நெடுங்காலம் சீரும் சிறப்போடும், உடல்நலப் பெருமையோடும் திகழ சிவபெருமான் அருள் பாலிக்குமாறு யாம் அனைவரும் வேண்டு வோமாக.

திருவான்மியூர்
*6—10—1987*

கோ. மு. முத்துசாமி

# ஏற்புரை

சிவத்தொண்டு ஓரளவு புரிந்து சிவத்தொண்டர்களிடையே அடியேன் வாழ்ந்துவரச் சிவபெருமான் அருள்புரிந்ததை எண்ணி எண்ணி அவரைப் போற்றுகிறேன். எனது 88-ஆம் ஆண்டு விழாவில் திருநாவுக்கரசு நாயனார் பதிகப்பாடலாகிய

''அத்தா உன் அடியேனை அன்பால் ஆர்த்தாய்
அருள்நோக்கில் தீர்த்த நீராட்டிக் கொண்டாய்
எத்தனையும் அரியை நீ எளியையானாய்
எனை ஆண்டுகொண்டு இரங்கி ஏன்றுகொண்டாய்
பித்தனேன் பேதையேன் பேயேன் நாயேன்
பிழைத்தனகள் அத்தனையும் பொறுத்தாயன்றே
இத்தனையும் எம்பரமோ ஐய ஐயோ
எம்பெருமான் திருக்கருணை இருந்தவாறே''

இத்திருத்தாண்டகத்தை நினைவு கூருகிறேன். இந்நேரத்தில், மக்கள் மேற்கொள்ளத்தக்க தெய்வ வழிபாட்டை வலியுறுத்தும் நூல் வெளியிடுதல் பொருத்தம் எனவும் அத்தகைமதொரு நூலை எழுதித்தருமாறு நண்பர் திரு. முத்துசாமி பிள்ளை அவர்களைக் கேட்டுக்கொண்டேன். அவர் கூறியது ''அருகில் சைவச்சீலர் மின்வாரிய முன்னாள் தலைமைப் பொறியாளர் திரு. ஆ. சுப்பிர மணியம் வசித்து வருகிறார்; தம்மிடம் எழுதி வைத்துள்ள நூல்கள் பலவுள; அவர்களைக்கொண்டு அரிய நூல் வெளியிடலாம் என்றார். இதன் பின்னர் யான் கேட்டுக் கொண்டதன்பேரில் திரு. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் ''சிவாலய வழிபாட்டுத் தோத்திரத் திரட்டாகிய'' இதனை இயற்றி உதவியுள்ளார்கள். இந்நூல் போன்ற பிரிதொரு நூல் இதுவரை வெளிவரவில்லை எனக் காஞ்சி ஞானப்பிரகாச மடத்தின் ஸ்ரீமத் சுவாமிகள் கூறியுள்ளதே இந்நூலின் சிறப்பை எடுத்துக்கூறும் இந்நூல் ஆசிரியருக்கு மனமார நன்றி தெரிவிக்கிறேன். இதற்குப் பாராட்டுரை வழங்கிய திரு. கோ. மு. முத்துசாமி பிள்ளை அவர் களும் நன்றி நவிலக் கடமைப்பட்டுள்ளேன்.

எனக்கும் அன்பர் பலருக்கும் நல்லுபதேசம் செய்துவரும் காஞ்சிபுரம் ஞானப்பிரகாச மடத்தின் குருமகா சந்நிதானம் அவர் களுக்கும் எனது பணிந்த வணக்கங்களை செலுத்துகிறேன்.

இந்நூலைக் கற்று இது காட்டும் நெறியில் வழிபாடாற்றும் அன்பர்களுக்குச் சிவபெருமான் இன்னருள் சுரக்குமாறு அப்பெரு மானைப் பிரார்த்திக்கிறேன்.

கயப்பாக்கம்
6—10—1987

இங்ஙனம், அன்பன்
முத்துலிங்க ரெட்டியார்

சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# சிவாலய வழிபாட்டுத் திருமுறைத் திரட்டு

## 1. முன்னுரை

### 1-1. வழிபாடு

'வழிபாடு' என்ற சொல் வழியிற்படுதல் அல்லது வழியில் நிற்றல் என்ற பொருளைத் தந்து, இறைவன் வகுத்த வழியில் நிற்றலை உணர்த்தி நிற்பது. இறைவன் வகுத்த வழிகள் அல்லது நெறிகள் சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்குமாம். இந்நெறிகளை இறைவன் தோற்றிய வேதங்களும் ஆகமங்களும் நமக்கு உணர்த்துவன, சரியை என்பது இறைவனது உருவத் திருமேனியைப் புறத்தே வைத்து வழிபடுதல்; கிரியை இறைவனைப் புறத்தேயும் அகத்தேயும் அவனது அருவுருவத் திருமேனியாகிய சிவலிங்கத்தே வழிபடுதல்; யோகம் அகத்தே அவனது அருவத் திருமேனியை வழிபடுதல்; ஞான வழிபாடு புறத்தொழில் அகத்தொழில் இரண்டும் இன்றி கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டைகூடல் என்ற அறிவுத் தொழில் களால் இறைவனோடு இரண்டறக் கலந்து நின்று ஆனந்தத் தழுந்தி நிற்றல். இவற்றைச் சிவாகமங்கள் விதித்தவாறு நாம் செய்யவேண்டும். இவ்வாறு படிமுறையாய் சரியை, கிரியை யோகம், ஞானம் என்ற நெறிகளில் நிற்க நிற்க, அறிவு நுணுகி வரவர, ஆணவ மலமும் தேய்ந்து, முடிவில் அம்மலம் முற்றிலும் நீங்கி, உயிர் சிவத்தைச் சார்ந்து நின்று பேரின்பமுற்று நிற்கும். இந்நெறிகளில் நின்று மலநீக்கம் பெற்று நிற்றலே வழிபாடு. இதனைத் திருஞான சம்பந்தமூர்த்திகள் நமக்கு உணர்த்தியருளுகிறார்.

திசையவர் தொழுதெழு சிறுகுடி மேவிய
தசமுகன் உரநெறித் தீரே
தசமுகன் உரநெறித் தீர்உமைச் சார்பவர்
வசையறும் அதுவழி பாடே — 3, 97, 8

இங்கு 'வசை' என்றருளியது ஆணவ மலமாகிய பெருங் குற்றத்தை. இறைவர் தம் தேவியோடு எழுந்தருளி இருக்கும் திருக்கயிலாய மலையை ''என் இருபது தோள்களின் வலிமையால்

(உரம்—வலிமை) எடுப்பேன்'' என்று இராவணன் எழுந்தது, அவனைப் பற்றி நின்ற ஆணவ மலத்தால். சிவபெருமான் தமது கால்விரலின் நுனியால் அவனை அழுத்தி அவனது ஆணவமலத்தின் வலியைப் போக்கினார். அதுபோன்று நாம் எம்பெருமான் வகுத்த நெறிகளில் நின்று வழிபட்டு வரின், அவர் நமது ஆணவமல வலிமையினைச் சிறிது சிறிதாக தேயச் செய்து, முடிவில் நம்மைப் பாசங்களினின்றும் நீங்குமாறு செய்து, தம்மைச் சாரும்படி செய்கிறார். இதுவே ஞானசம்பந்தப் பெருந்தகை இப்பாடலால் நமக்கு உணர்த்தியருள்வது.

## 1-2. சிவாலய வழிபாடு

சிவாகமங்கள் விதித்தவாறு சரியை, கிரியை ஆகிய இரு நெறிகளிலும் நின்று, இறைவனை வழிபட்டு வந்து, அவற்றால் அடையப்பெறும் பக்குவம் பெற்றாராலன்றி, ஏனையோரால் யோக நெறியும் ஞான நெறியும் எளிதிற் பின்பற்ற கூடியனவல்ல. நம்போன்றவர்கள் எளிதில் கடைப்பிடித்து நிற்கக்கூடிய நெறிகள் சரியை, கிரியை ஆகிய இரண்டுமே. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார், திருநாவுக்கரசு நாயனார், சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஆகிய சமயாசாரியர் மூவரும் மேலான ஞான நெறியில் நின்றவர்கள். ஆயினும் அவர்கள் சரியை, கிரியை ஆகிய இரு நெறிகளையும் நம்போன்ற பாமர மக்களுக்கு உணர்த்தும் வகையில், தமிழ்நாட்டுச் சிவத்தலங்கள் தோறும் சென்று வழிபட்டு, வழிபாட்டு முறைகளைத் தமது தேவாரப் பாடல்களில் உணர்த்தியுள்ளார்கள். மேலும் சிவாலயங்களில் உள்ள பல மூர்த்திகளையும் போற்றி வணங்கி உள்ளார்கள்.

சேக்கிழார் சுவாமிகள் தாம் அருளிச் செய்த திருத்தொண்டர் புராணத்தில் சமயாசிரியர் மூவர் வரலாறுகளையும் கூறுவதோடமையாது, அவர்கள் அருளிச் செய்த தேவாரத் திருப்பதிகங்களில் பொதிந்து கிடக்கும் ஆலய வழிபாட்டு முறைகளைப் பல இடங்களில் எடுத்துக் காட்டுகிறார்.

சமயாசிரியர் மூவர், சேக்கிழார் ஆகிய நால்வரும் காட்டியருளும் சிவாலய வழிபாட்டு முறைகளைப் பின்பற்றி, சிவாலய வழிபாட்டுக்குரிய திருமுறைப் பாடல்கள் சிலவற்றைத் திரட்டி, இச்சிறு நூலில் தரப்படுகின்றது. அன்பர்கள் தாம் செய்யும் சிவாலய வழிபாடுகளில் இவற்றை மனமுருகிப்பாடி இம்மை, மறுமை நலங்களை இறைவன் அருளாற் பெறுவார்களாக.

## 2. சிவாலயத்தை அடைதல்

(சிவத்தலத்துக்குப் புறப்பட்டு அதனை அடையும்போதே அத்தலத்து இறைவன், இறைவி ஆகிய இருவரையும் நினைந்து வழிபட வேண்டும். (பெரியபுராணம், ஞானசம். 108, 181)

1. செப்ப நெஞ்சே நெறிகொள் சிற்றின்பம்
துப்பன் என்னா தருளே துணையாக
ஒப்பர் ஒப்பர் பெருமான் ஒளிவெண்ணீற் (று)
அப்பர் சோற்றுத் துறைசென் றடைவோமே — 1, 28, 1

2. அந்தண் சோற்றுத் துறைஎம் ஆதியைச்
சிந்தை செய்ம்மின் அடியார் ஆயினீர்
சந்தம் பரவு ஞான சம்பந்தன்
வந்த வாறே புனைதல் வழிபாடே. — 1, 28, 11

பண் : தக்கராகம்

(குறிப்பு : சோற்றுத்துறை — பேரின்பத்துறை. சோறு பேரின்பம். ''அன்னம் பாலிக்கும் தில்லைச் சிற்றம்பலம்''; ''பாதமே சோறு பற்றினவா தோணோக்கம்'' என்ற திருமுறை வாக்குகள் காண்க. எல்லாச் சிவாலயங்களும் பேரின்பத் துறைகளே.)

## 3. கோபுரத்தைக் கண்டதும் கைகூப்பி வணங்குதல்

(சிவாலய கோபுரத்தை நாம் தூரத்தே கண்டதும் அதனை இறைவனது தூலத் திருமேனியாகப் பாவித்து இரு கைகளையும் சிரசின்மேற் கூப்பி வணங்குதல் வேண்டும். (ஞானசம். புரா. 952)

3. அலைக்கின்ற நீர் நிலம் காற்றனல் அம்பரம் ஆகிநின்றீர்;
கலைக்கன்று சேரும் கரத்தீர்; கலைப்பொருள் ஆகிநின்றீர்;
விலக்கின்றி நல்கு மிழலையுளீர்; மெய்யில் கையொடுகால்
குலைத்தின்று நும்மை மறக்கினும் என்னைக்
[குறிக்கொண்மினே

—திருவீழிமிழலைத் திருவிருத்தம், 4, 96, 3

(குறிப்பு : நிலம் (பிருதுவி), நீர் (அப்பு), தீ (தேயு), காற்று (வாயு), ஆகாசம் ஆகிய இவ்வைந்தும் இங்கு ஐந்து மண்டலங்களைக் குறித்து நிற்பன. இம்மண்டலங்கள் ஐந்தும் முறையே நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை ஆகிய ஐந்து கலாசக்கிரங்கள் என்று சொல்லப்பெறும். இம் மண்டலங்கள் இறைவனது தூலத் திருமேனி (பரு உடம்பு). இம்மண்டலங்களில் இறைவன் ஒன்றாகக் கலந்து நின்று

அவற்றைத் தொழிற்படுத்துகிறான். ஆதலின் இவை இறைவன்து தூலத் திருமேனியாகின்றன. இத்தூலத் திருமேனியை உணர்த்தி நிற்பது சிவாலய கோபுரம்.)

## 4. கோபுரத்தை அடைந்ததும் விழுந்து வணங்கல்

(சிவாலயத்தை அடைந்ததும் கோபுரத்தை எட்டு அங்கங்களும் நிலத்திற் படும்படி கீழே விழுந்து வணங்க வேண்டும். (ஞானசம். புரா. 953). இவ்வணக்கம் அட்டாங்க நமஸ்காரம் என்று சொல்லப் பெறும். இம்முறைப்படி தலை, இரு கைகள், இரு செவிகள், மோவாய், இரு தோள்கள் ஆகிய எட்டு உறுப்புகளும் நிலத்தில் தோயுமாறு தரையில் விழுந்து கால்களை நீட்டிப் பணிந்து வணங்குதல் வேண்டும்.)

4. மிக்கவர் தொழுதெழு வெங்குரு மேவிய
அக்கினோ டரவசைத் தீரே
அக்கினோ டரவசைத் தீர்உம தடியிணை
தக்கவர் உறுவது தவமே. —3, 94, 5

—திருவெங்குருப் (சீகாழிப்) பதிகம், சாதாரிப் பண்.

(குறிப்பு : தொழுதெழுதல் — கீழே விழுந்து அட்டாங்கமாக வணங்கி எழுதல். அரவு—பாம்பு ; இங்குக் குண்டலினியாகிற பாம்பினைக் குறிப்பது. குண்டலினி — சுத்த மாயை. மாயை பாம்பு போன்று ஒடுங்கி விரிவது. இறைவர் 'அரவசைத்தல்' அவர் மாயையைத் தொழிற்படுத்துவதை உணர்த்தி நிற்பது.

சிவாலய கோபுரத்தின் மேற்பகுதி சிவதத்துவங்கள் ஐந்தையும், நடுப்பகுதி வித்தியாதத்துவங்கள் ஏழையும், அடிப்பகுதி ஆன்ம தத்துவங்கள் 24-ஐயும் உணர்த்தி நிற்பன. (சித்தாந்த சாராவளி, சரியாபாதம், சுலோகம். 36). இத்தத்துவங்களுக்கு முதற் காரணமாக இருப்பது சுத்தமாயை, குண்டலி, இறைவன் அணியும் அரவு. இறைவன் அரவசைத்தல் என்பது சுத்தமாயை, சுத்தா சுத்தமாயை, அசுத்த மாயை ஆகிய மூவகை மாயையினின்றும் ஐந்து மண்டலங்களையும் அவ்வண்டங்களில் உள்ள பல்வேறு உலகுகளையும் படைத்துத் தனது தூலத் திருமேனியாகக் கொண்டு அவற்றைத் தொழிற்படுத்துவதைக் குறித்து நின்றது. இவ்வாறு இறைவன் தூலத் திருமேனியாகக் கோபுரத்தைப் பாவித்து அட்டாங்க நமஸ்காரம் செய்தல் முறை.)

## 5. திருக்கோயிலை வலம் வருதல்

திருக்கோயிலில் உள்ள பிராகாரங்கள் (திருச்சுற்றுகள்) இறைவன் திருவருள் மயமாக இருப்பன. கர்ப்பக்கிரகதில்

(கருவறையில்) உள்ள சிவபெருமானது நுண்ணிய திருவருட் கிரணங்கள் எட்டுத் திக்குகளிலும், மேலும் கீழும் பரவி, பிராகாரங்களில் எங்கும் நிறைந்து (வியாபித்து) நிற்கும். ஆதலின் நாம் பிராகாரங்களில் வலம் வரும்போது நம் மனம் வேறிடத்துச் செல்லாதவாறு இறைவனையே நினைந்து, அவன் திருவருளில் நாம் அடங்கிக் கிடப்பதாகப் பாவிக்கவேண்டும். இறைவனையே நினைந்து வலம்வர பஞ்சாக்கர செபமும், திருமுறைப் பாடல்களை ஓதி வருதலும், ஓதுவார் பாடக் கேட்டு வருதலும் துணை செய்வன.

வலம் வருதலை வடமொழியில் பிரதட்சணம் என்பர். இச் சொல்லுக்கு மலநீக்கம், திருவருட்செல்லப்பேறு என்ற பொருள்கள் உண்டு என்பர். உயிர் மும்மல நீக்கம்பெற்று இறைவன் திருவருளில் படுதலே பிரதட்சனம்.

'பஞ்சாக்கர மாலை' என்னும் சிறந்த நூல் பிரதட்சணம் என்பது இறைவன் அருளில் வீழ்தல் என்று கூறுகிறது.

—''உன்னை, 'ந' 'ம' நீத்து, இறைஞ்சி,
எண்ணில் திருவஞ்செழுத்தை எண்ணி, இறைக்கீந்து, வலம்
பண்; அருளில் வீழ்ந்து பணி.''

என்பது இந்நூற் பாடற்பகுதி (பா. 58). வலம் வரும்போது நாம் மலத்தினின்று நீங்கியதாகப் பாவித்து, அருளில் வீழ்வதாகவும் நினைந்து வழிபட வேண்டும் என்று இது கூறுகிறது.

'சிவாய நம' என்பது சூக்குமப் பஞ்சாக்கரம். திரோதான சத்தியாகிற 'ந' காரத்தையும் ஆணவமலமாகிய 'ம' காரத்தையும் நீத்து, 'சிவாய' என்ற காரண பஞ்சாக்கரத்தை மனத்தில் நினைந்து வழிபடுதல் வேண்டும் என்று இதில் விதிக்கப்படுகிறது. காரண பஞ்சாக்கர செபம் நிர்வாண தீட்சை பெற்றோர்க்கன்றி ஏனையோர்க்கன்று. ஆதலின் சமயதீட்சை பெற்றோர் 'நமசிவாய' என்ற தூல பஞ்சாக்கரத்தையும், விசேட தீட்சை பெற்றோர் 'சிவாயநம' என்ற சூக்கும பஞ்சாக்கரத்தையும் செபித்து வலம் வரவேண்டும். இவ்வாறு செபித்து வலம் வரும்போது நாம் மலங்களின்றும் நீங்கிய பாவனையும் இறைவன் அருளில் வீழ்ந்திருக்கும் பாவனையும் இருத்தல் வேண்டும்.

5. மந்தரம்மன பாவங்கள் மேவிய
பந்தனையவர் தாமும் பகர்வரேல்
சிந்தும்வல்வினை செல்வமும் மல்குமால்
நந்திநாம நமச்சி வாயவே —3, 49, 6

பண் : கௌசிகம்

6. இல்லக விளக்கது இருள் கெடுப்பது
சொல்லக விளக்கது சோதி உள்ளது
பல்லக விளக்கது பலரும் காண்பது
நல்லக விளக்கது நமச்சிவாயவே —4, 11, 8

பண் : காந்தாரபஞ்சமம்

7. வைத்த பொருள்நமக் காம்என்று சொல்லி மனத்தடைத்துச்
சித்தம் ஒருக்கிச் சிவாய நமஎன் றிருக்னில்லால்
மொய்த்த கதிர்மதி போல்வார் அவர்பா திரிப்புலியூர்
அத்தன் அருள்பெற லாமோ அறிவிலாப் பேதைநெஞ்சே.

—திருவிருத்தம், 4, 95, 5

8. அல்ல லாகஐம் பூதங்கள் ஆட்டினும்
வல்ல வாறு சிவாய நம என்று
நல்லம் மேவிய நாதன் அடிதொழ
வெல்ல வந்த வினைபகை வீடுமே. —5. 43. 6

திருக்குறுத் தொகை

9. விண்ணினார் பணிந் தேத்த வியப்புறும்
மண்ணினார் மற வாது சிவாய என்(று)
எண்ணினார்க் கிடமா எழில் வானகம்
பண்ணினார் அவர் பாலைத் துறையரே. —5, 51, 6

—திருக்குறுந்தொகை

10. எட்டாம் திசைக்கும் இருதிசைக்கும் இறைவா முறைஎன்(று)
இட்டார் அமரர்வெம் பூசல்எனக் கேட்(டு) எரிவிழியா
ஒட்டாக் கயவர் திரிபுரம் மூன்றையும் ஓர்அம்பினால்
அட்டான் அடிநிழற் கீழதன்றோ என்றன் ஆருயிரே. —4, 81, 1

11. நானையோ தவம்செய்தேன் சிவாய நம எனப்பெற்றேன்
தேனாய்இன் அமுதமாய்த் தித்திக்கும் சிவபெருமான்
தானேவந்தென் உளம்புகுந்(து) அடியேற் கருள்செய்தான்
ஊனாரும் உயிர்வாழ்க்கை ஒறுத்தன்றே வெறுத்திடவே.

—8, 55, 3 (திருவாசகம், திருவேசறவு 10)

12. தன்னடி நிழற்கீழ் என்னையும் தகைத்த
சசிகுலா மவுலியைத் தானே
என்னிடைக் கமலம் மூன்றினுள் தோன்றி
எழும்செழும் சுடரினை அருள்சேர்
மின்நெடும் கடலுள் வெள்ளத்தை வீழி
மிழலையுள் விளங்கு வெண்பளிங்கின்
பொன்னடிக்(கு) அடிமை புக்கினிப் போக விடுவனோ
பூண்டு கொண்டேனே. —9, 49

—சேந்தனார் திருவிசைப்பா,
திருவீழிமிழலை, பண்: பஞ்சமம்

**13.** அங்கம் மாநிலத்தெட்டுற வணங்கிப்புக்(கு) அஞ்சலிமுடி ஏறப்
பொங்கு காதலிற் புடைவலம் கொண்டுமுன் பணிந்து
[போற்றெடுத்தோதி
துங்க நீள்பெருந் தோணியாம் கோயிலை அருளினால்
[தொழுதேறி
மங்கை யோடுடன் வீற்றிருந் தருளினார் மலர்க்கழல்
[பணிவுற்றார்.
—12 ஞானசம். புரா. 953

குறிப்பு : பா. **5. 6** இவை '**நமசிவாய**' என்ற தூல **பஞ்சாக்கரத்தை** (அஞ்செழுத்தை) உணர்த்துவன. பஞ்சாக்கரத்தில் 'சி' — இறைவன்; சிவன்; 'வா' — இறைவனை விட்டுப் பிரியாத அவனது சத்தி, ஆற்றல்; 'ந' — திரோதான சக்தி (மறைத்தற் சத்தி), அது செலுத்தும் கன்மம் ; மாயை ஆகிய மூன்றும்; 'ம' — ஆணவமலம். தூல பஞ்சாக்கரத்தில் திரோதான சத்தியும் ஆணவமலமும் முன்னிற்க, சிவமும் சத்தியும் பின் நிற்கின்றன. இது உயிர் இறைவனை மறந்து பாசத்தில் அழுந்தி நிற்கும் நிலையை உணர்த்துவது. இதனைச் செபித்துவர உயிர் இறைவனையும் (சி) அவன் திருவருளாகிய சத்தியையும் (வ) மறந்து நிற்கும் நிலை சிறிது சிறிதாக நீங்கி வரும். ஆணவ மலத்தின் வலிமையும் குன்றி வரும்.

பா. **7, 8, 11** '**சிவாயநம**' என்பது சூக்குமப் பஞ்சாக்கரம்' இதில் திரோதான சத்தியும் (ந) ஆணவ மலமும் (ம) பின்நிற்க, இறைவனும் (சி) அவனது திருவருளும் (வ) முன்நிற்க, உயிர் (ய) நடுவே நிற்கின்றது. இது உயிர் 'ந', 'ம' ஆகியவற்றுடன் சேர்ந்து உலக போகங்களில் (இன்ப துன்பங்களில்) அழுந்தியும், 'சி', 'வ' ஆகிய இரண்டையும் சார்ந்து நின்று சிவத்தின் அருளில் தோய்ந்தும் நிற்கும் நிலையை உணர்த்துவது. அதாவது உயிர் சார்ந்ததன் வண்ணமாக நிற்கும் நிலையை உணர்த்துவது. இந்தப் பஞ்சாக்கரத்தை இடைவிடாது செபித்துவரின் இது இறைவன் திருவருளில் என்றும் தோய்ந்து நிற்கும் நிலையை எய்துவிக்கும்.

பா. **7.** அத்தன் அருள் பெறல்—சி','வ' ஆகிய இரண்டையும் சேர்ந்து நிற்றல். (அத்தன்—'சி'; அருள்—'வ').

பா. **8.** வினை—கன்மமலம் (ந); பகை—உயிருக்குப் பெரும் பகையாக உள்ள ஆணவ மலம் (ம).

பா. **9.** '**சிவாய**' என்பது காரண பஞ்சாக்கரம் என்று சொல்லப்பெறும். இது உயிர் 'ந','ம' ஆகிய இரண்டையும் விட்டு நீங்கி,

இறைவன் திருவருளைச் சார்ந்து நிற்கும் நிலையை உணர்த்து கிறது. இதில் 'ம' காரம் 'ந' காரத்தில் ஒடுங்கி நிற்க, 'ந' காரம் 'வ' காரத்தில் ஒடுங்கி நிற்பதால், இதுவும் ஐந்தெழுத்தேயாம். அல்லது ஐந்தெழுத்தாகவே இது 'சிவயவசி' எனவும் ஓதப்பெறும்.

திருக்கோயில் பிராகாரங்களை முறைப்படி பஞ்சாக்கரத்தைச் செபித்து வலம் வருவதால் உயிர் காரணபஞ்சாக்கரம் உணர்த்தும் நிலையை எய்தும்; பிராகாரங்களில் இறைவரது திருவருட் சுடர் நிறைந்து நிற்கிறது. பிராகாரங்களை வலம் வரும்போது உயிர் அச்சுடரோடு கலந்து, அச்சுடர் மயமாய், திருவருள் வயப்பட்டு 'சிவாய' என்ற காரணபஞ்சாக்கரம் உணர்த்தும் நிலையில் நிற்கும்.

பா. **10.** திரிபுரம் மூன்றையும் எரித்தல்—மும்மலமும் நீங்கச் செய்தல்; உயிர் 'ந', 'ம' ஆகிய இரண்டினின்றும் நீங்கி நிற்குமாறு செய்தல்; உயிரைச் 'சிவாய' என்ற காரணபஞ்சாக்கரம் உணர்த்தும் நிலையில் நிற்கச் செய்தல். அடிநிழல் — இறைவன் திருவடி அவனது திருவருளேயாம். உயிர் திருவடி நிழற்கீழ் நிற்றல்—இறைவன் திருவருளைச் சார்ந்து நிற்றல்; 'சிவாய' என நிற்றல்.

பா. **11.** சிவபெருமான் உளம்புகுதல்:—உளம்-இங்கு உயிரைக் குறிப்பது. உளம்புதல்—உயிர் திருவருளில் பதியும்படி செய்தல்; 'சிவாய' என நிற்கச் செய்தல்.

பா. **12.** அடிமை புகுதல்—உயிர் 'சிவாய' என்ற காரண பஞ்சாக்கரம் உணர்த்தும் நிலையில் நின்று, இறைவன் திருவருளோடு கலந்து நின்று, அவன் திருவருள்மயமாய், தனது இச்சை, அறிவு, தொழில் ஆகிய மூன்றும் இறைவனது இச்சை அறிவு செயல்களாகத் திகழுமாறு நிற்றல்.

பா. **13.** 'மங்கை'—'வ'; அவருடன் 'வீற்றிருந்தருளினார்'- 'சி', மலர்க்கழல் பணிவுறுதல் — சிவாய' என்றும் திருவருள் மயமாய் நிற்றல்.)

## 6. திருமுன் பணிதல்

(திருக்கோயிலுள் உள்ள வெளிப் பிராகாரத்தில் வலம் வந்ததும், கருவறைக்கு முன் உள்ள கொடிமரம், பலிபீடம், இடபம் ஆகிய மூன்றையும் அட்டாங்கமாக வணங்க வேண்டும்).

**14.** பெருக்காறு சடைக்கணிந்த பெருமான் சேரும்
பெருங்கோயில் எழுபதினோ டெட்டும், மற்றும்

கரக்கோயில், கடிபொழிலசூழ் ஞாழற் கோயில்,
கருப்பறியற் பொருப்பனைய கொகுடிக் கோயில்,
இருக்கோதி மறையவர்கள் வழிபட் டேத்தும்
இளங்கோயில், மணிக்கோயில், ஆலக்கோயில்,
திருக்கோயில், சிவன்உறையும் கோயில் சூழ்ந்து
தாழ்ந்தி றைஞ்சத் தீவினைகள் தீரும்அன்றே
—6,71,5; அடைவு திருத்தாண்டகம்

பெருங்கோயில் : மாடக்கோயில்; கோட்செங்கட் சோழ நாயனாரால் கட்டப்பெற்ற மாடக் கோயில்கள் எல்லாம் பெருங் கோயில்கள் என்பர் திரு. சதாசிவ செட்டியார். (திராவிட வேதத் திரட்டு). திரு அம்பர்த்தலத்தில் கோட்செங்கட் சோழர் கட்டிய மாடக்கோயில், இது காவிரிக்குத் தென் கரையில் உள்ள சோழ நாட்டுத் தலங்கள் 127-இல் 54-வது தலமாக விளங்குகிறது.

கரக்கோயில் : இது திருக்கடம்பூர் கரக்கோயிலை உணர்த்தி நின்றது. இத்தலத்தில் ''தேவேந்திரன் வழிபட்டு ஆலயத்தினைத் தன்னுலகம் கொண்டுபோக எண்ணி, பாதலம் வரைத் தனது கரத்தால் அகழ்ந்து ஊடுருவிச் செல்வது கண்டு, பழையபடி பூசித்தான்'' என்ற வரலாறு பற்றி இத்தலம் கரக்கோயில் என்ற பெயர் பெற்றது (திராவிடவேதத் திரட்டு).

ஞாழற் கோயில் : ஞாழல்—குங்குமமரம், கோங்குமரம், மயிர்க் கொன்றை ஆகிய மரங்களைக் குறிப்பது, இந்த மரங்களில் யாதாயினும் ஒன்றைத் தலமாமாகக் கொண்ட கோயில் ஞாழற் கோயில் எனப் பெயர் பெற்றது போலும். இது ஒரு வைப்புத்தலம்.

கொகுடிக் கோயில் : கொகுடி முல்லைக் கொடியின் வகை என்பர். இக்கொடியைத் 'தலமர'மாகக் கொண்ட தலம் போலும். இதுவும் ஒருவைப்புத் தலம்.

இளங்கோயில் : மீயச்சூர் இளம்கோயில், சோழ நாட்டுத் தென்கரைத் தலங்களில் 56-வது தலம்.

மணிக்கோயில் : ஒரு வைப்புத்தலம் (மணி-துளசி) இது துளசிக் காட்டில் இருந்த கோயில் ஆதல் கூடும்.

ஆலக்கோயில் : கச்சூர் ஆலக்கோயில்; தொண்டை நாட்டு 26வது தலம். ஆலமரம் தலவிருக்ஷம் ஆதலால் இப்பெயர்பெற்றது.

திருக்கோயில் : திரு—இறைவன் திருவருள். ''சென்றடையாத திருவுடையானை'' ஞானசம்பந்தர். திருக்கோயில்—இறைவன் திருவருட் சுடர்கள் நிறைந்த கோயில்.

சிவன் உறையும் சிவாலயங்களே மேலான அருட்சுடர்கள் நிறைந்த கோயில்களாம். சூழ்தல்-பிராகாரங்களில் சுற்றி வருதல்; பிரதக்ஷணம் செய்தல். தாழ்ந்திறைஞ்சுதல் — திருமுன் கீழே விழுந்து அட்டாங்க பஞ்சாங்க வணக்கங்கள் செய்து வாழ்த்துதல், போற்றுதல்.

## 7. கொடிமர வணக்கம்

15. சோலைப் பசுங்கிளியே நூநீர்ப் பெருந்துறைக்கோன்
கோலம் பொலியும் கொடி கூறாய் — சாலவும்
ஏதிலார் துண்என்ன மேல் விளங்கி ஏர் காட்டும்
கோதிலா ஏறாம் கொடி. —8, 365

—திருவாசகம், திருத்தசாங்கம். 10

(குறிப்பு: சிவபெருமானுக்கு உரிய கொடி இடபக் கொடி (ஏறாம் கொடி). திருவிழாக் காலங்களில் கொடிமரத்தில் இடபக் கொடி ஏற்றப்பெறும். மும்மலங்களாற் கட்டுண்டு கிடக்கும் உயிர், அம்மலங்களினின்றும் நீங்கி, திருவருளைச் சாரும்படி கொடிமரத்தின் மேல் கொடி ஏற்றப் பெறும். ஏர் — அழகு! இறைவன் திருவருளாகிய அழகு. கோது — குற்றம்; பாசம்; மும்மலம். கொடிமரத்தின்மேல் விளங்கும் இடபம் மலம் நீங்கிா சுத்தான்மாவைக் குறிக்கும்.)

## 8. பலிபீட வணக்கம்

(பலிபீடம் பாசத்தை நீக்கும் சிவசத்தியை உணர்த்துவது. உயிர்களைப் பந்திக்கும் பாசங்களை நீக்குவதால் பலிபீடம் 'பத்திரலிங்கம், என்று சொல்லப்படும். ஆதலின் பலிபீடத்தையும் நாம் திருமுன் நின்று வணங்குதல் வேண்டும்.)

16. பாசமான களைவார்; பரிவார்க்கமுதம் அனையார்;
ஆசைதீரக் கொடுப்பார்; அலங்கல்விடை மேல்வருவார்;
காசைமலர்போல் மிடற்றார்; கடவூர்மயானம் அமர்ந்தார்;
பேசவருவார் ஒருவர்; அவர் எம்பெருமான் அடிகளே.

—2, 80, 7 பண்: காந்தாரம்

(குறிப்பு: பாசம் களைவது — இறைவனது சிவசத்தி. திரோதான சத்தி; மறைப்புச் சத்தி இச்சத்தியையே நாம் பலி பீடத்தில் நினைந்துவழிபட வேண்டும்).

## 9. இடப தேவர் வணக்கம்

17. வெந்த நீறுமெய் பூசவல் லானை
வேத மால்விடை ஏறவல் லானை
அந்தமா திஅறி தற்கரி யானை
ஆறலைத் தசடை யானைஅம் மானைச்
சிந்தை என்தடு மாற்றறுப் பானைச்
தேவ தேவன்என் சொல்முனி யாதே
வந்தென் உள் ளம்புகும் வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்நினைக் கேனே.

—7, 57, 3 பண்: தக்கேசி

வேதமால்விடை — வேதவிடை. மால்விடை: வேதவிடை —வேதம் ஓதும் பிரமதேவ வடிவத்தை உடைய இடபதேவர்; மால்விடை — திருமால் வடிவத்தை உடைய இடபதேவர். ''பிரம விஷ்ணு ருத்ர சொரூபமாயும், முதன்மையான தேவராயும் இருக்கும் ரிஷபராஜரைத் தியானிக்கின்றேன்'' என்று சிவாலயங் களில் சிவாசாரியர் (காலசந்தி பூசையில்) தியானித்து இடப தேவரைப் பூசிக்க வேண்டும் என்று அகோரசிவாசாரியர் அருளிய நூலாகிய 'பரார்த்த நித்ய பூஜா விதி' என்னும் 'சிவாலய நித்ய பூஜா விதி' கூறுகிறது. இதனால் இடபதேவர் அயன், மால், உருத்திரன் ஆகிய மூவர் வடிவாக உள்ளவர் என்பது அறியப்படுகிறது. இங்கு அயன், மால் ஆகிய இரு வடிவங்களும் போற்றப்பட்டன.

முப்புரங்களைச் சிவபெருமான் தீயெழ விழித்து அழித்தபோது சிவபெருமானைத் திருமால் இடபமாக நின்று தாங்கினார் என்பது வரலாறு.

''தடமதில்கள் அவைமூன்றும் தழல் எரித்த அந்நாளில்
இடமதாய்த் தாங்கினான் திருமால்காண் சாழலோ''

என்பது மாணிக்கவாசக சுவாமிகள் அருள்வாக்கு.

*(8, 269, திருச்சாழல், 15)*

இனி ஆலயத்துட்சென்று அங்கு எழுந்தருளியுள்ள பலவேறு மூர்த்திகளையும் வணங்கவேண்டும்.

## 10. கணபதி வணக்கம்

18. கரியின் மாமுகம் உடைய கணபதி தாதைபல் பூதம்
திரிய இல்பலிக் கேகும் செழுஞ்சுடர் சேர்தரு மூதூர்
சரியின் முன்கைநன் மாதர் சதிபட மாநடம் ஆடி
உரிய நாமங்கள் ஏத்தும் ஒலிபுனற் காழிநன் நகரே.

—2, 96, 3; பியந்தைக்காந்தாரம்

19. பொருந்தாத செய்கை பொலியக் கண்டேன்
போற்றிசைத்து விண்ணோர் புகழக் கண்டேன்
பரிந்தார்க் கருளும் பரிசும் கண்டேன்
பாராய்ப் புலைாகி நிற்கை கண்டேன்
விருந்தாய்ப் பரந்த தொகுதி கண்டேன்
மெல்லியலும் விநாயகனும் தோன்றக் கண்டேன்
மருந்தாய்ப் பிணிதீர்க்கு மாறு கண்டேன்
வாய்மூர் அடிகளை நான் கண்டவாறே

—6, 77, 8; திருத்தாண்டகம்

20. தனதன்நற் றோழா! சங்கரா! குல
பாணியே! தாணுவே! சிவனே!
கனகநற் றூனே! கற்பகக் கொழுந்தே!
கண்கள் மூன்றுடையதோர் கரும்பே!
அனகனே! குமர விநாயக சனக!
அம்பலத் தமரசே கரனே!
நுனகழல் இணைஎன் நெஞ்சினுள் இனிதாத்
தொண்டேன் நுகருமா நுகரே

9, 1, 7; திருமாளிகைத்தேவர் திருவிசைப்பா
கோயில் 1,7.

21. திருவாக்கும் செய்கருமம் கைகூட்டும் செஞ்சொல்
பெருவாக்கும் பீடும் பெருக்கும்—உருவாக்கும்
ஆதலால் வானோரும் ஆனை முகத்தானைக்
காதலால் கூப்புவர் தம் கை —11, 20, 5.

22. விநாயகனே வெவ்வினையை வேர்அறுக்க வல்லான்
விநாயகனே வேட்கைதணி விப்பான்—விநாயகனே
விண்ணிற்கும் மண்ணிற்கும் நாதனுமாம் தன்மையினால்
கண்ணிற் பணிமின் கனிந்து —11, 20, 5.

23. என்னை நினைந்தடிமை கொண்டென் இடர்கெடுத்துத்
தன்னை நினையத் தருகின்றான்—புன்னை
விரசு மகிழ் சோலை வியன்நாரை யூர்முக்கண்
அரசு மகிழ் அத்திமுகத் தான் —11, 31, 1.

24. மருப்பை ஒரு கைக்கொண்டு நாரையூர் மன்னும்
பொருப்பைஅடி போற்றத் துணிந்தால்—நெருப்பை
அருந்த எண்ணு கின்றஎறும் பன்றே அவரை
வருந்த எண்ணு கின்ற மலம் —11, 31, 7.

குறிப்புகள். பா. 18—24 :

18. 'கரியின் மாமுகம் உடைய (கணபதி; கரி—யானை) இது

ஓம் கஜமுகாய நம : (ககார கணபதி அஷ்டோத்தரம். 35)
ஓம் கஜானனாய நம : (ககார கணபதி ஸஹஸ்ர நாமாவளி 226, விநாயகர் அஷ்டோத்தரம். 27)
ஓம் கணபதயே நம : (ககார. கண. அஷ். 10, கணபதி சகஸ்-1)
ஓம் கணநாதாய நம : ( ,, 5, ,, -4)
ஓம் கணேச்வராய நம : ( ,, 1, ,, -2)
ஓம் கணேசாய நம : ( ,, 7)
ஓம் கணநாயகாய நம : ( ,, 8)
ஓம் கண தேவாய நம : ( ,, 15)
ஓம் கணாதிபாய நம : ( ,, 16 கணபதி சகஸ். 5)
ஓம் கணாதிராஜாய நம: ( ,, 20)
ஓம் மகாகணபதயே நம: ( கண. சகஸ். 39)

போன்ற பல வடமொழி மந்திரங்களாகத் திகழ்வது.

கணபதி தாதை—''ஓம் ஈசான புத்ராய நம :'' என்ற கணபதி மந்திரம் (கண. சகஸ். 47)

சில்பலி-உயிர்களது அறிவு; சீவபோதம். இதனை இறைவன் பலியாக ஏற்று, சிவபோதத்தை (சிவஞானத்தை) உயிர்களுக்கு அருளிச் செய்கிறான். சீவ போதத்தைவிட்டு நீங்கி சிவ போதத்தைப் பெற்ற உயிர் மும்மலங்களின்றும் நீங்கி திருவருள் வயப்பட்டு நிற்கும்; 'சிவாய' என்ற காரணபஞ்சாக்கரம் உணர்த்தும் நிலையில் நிற்கும். ''ஓம் சிவாய நம'' என்ற மந்திரம் கணபதிக்கும் உரியது. (கணபதி சகஸ். 757) இங்கு 'சிவாய (நம) —சிவனுக்கு வணக்கம் என்று பொருள். கணபதிக்கும் சிவனுக்கும் வேறுபாடு இல்லை என்பர்.

19. விநாயகன் : வி-மேலான, உயர்ந்த; நாயகன்—தலைவன் ஓம் விநாயகாய நம : (விநாய அஷ்டோத்தரசதம்-1. வாய்மூர் அடிகள் — 'சி'; மெல்லியல் — சத்தி. 'வா'; விண்ணோர், பரிந்தார்—'ய' ; மருந்தாய்ப் பிணி தீர்ப்பது—திரோதன சத்தி, 'ந'; பிணி—ஆணவ மலமாகிய பந்தம், 'ம'; இவ்வாறு இத்திருத் தாண்டகத்தில் சூக்கும பஞ்சாக்கரம் மறைந்து நிற்பதைக் காணலாம். 'ஓம் பஞ்சாக்ஷராத்மனே நம :' (கண. சகஸ். 870). மெல்லியனும் விநாயகனும் தோன்றக் கண்டேன் : தோன்ற— சிவனோடு தோன்ற ; 'சி'; மெல்லியல்—வா; விநாயகர்— சுத்தான்மா; 'ய', சோமாஸ்கந்த மூர்த்தத்தில் இறைவனுக்கும் அம்மையாருக்கும் நடுவே முருகப் பெருமான் சுதானமாவுக்கு

அறிகுறியாக வீற்றிருப்பர். இதுபோன்று அம்மையப்பர்களுக்கு இடையே விநாயகர் பெருமான் எழுந்தருளி இருக்கும் ஒரு மூர்த்தத்தையும் வணங்குவதுண்டு.

''மெல்லியலும் விநாயகனும் தோன்றக் கண்டேன்'' என்பது 'சிவாய' என்ற அல்லது 'சிவயவசி' என்ற காரண பஞ்சாக்கரத்தை உணர்த்தி நிற்பது.

பிணி தீர்த்தல்—'ந', 'ம' நீக்கம். இதுவும் ''ஓம் பஞ்சாக்ஷ ராத்மனே நம'' என்ற கணபதி மந்திரம் (கண. சகஸ். 870)

20. தாணு — சிவபெருமானுக்கன்றி விநாயகருக்கும் ''ஓம் ஸ்தாணவே நம'' என்ற மந்திரம் உண்டு (கண. சகஸ். 521)

தாணு — சிவபெருமான் எனக் கொள்ளின் ''ஓம் ஸ்தாணுப்ரியாய நம : என்ற கணபதிக்குரிய மந்திரமாம்.

குமர விநாயகன் — ''ஓம் குமாரகுரவே நம'' (கண. சம்ஸ். 46) சனகன் — தந்தை; விநாய சனக — ''ஓம் ஈசான புத்ராய நம'' என்ற கணபதி மந்திரம் (கண. சகஸ். 47)

நுன — 'சி' ; கழல் — இறைவன் திருவருள், சத்தி, 'வா'; என்—'ய', ''நுனகழல் இணை என் நெஞ்சினுள் இனிதாத் தொண்டனேன் நுகருமாநுகரே''—'சிவாய' என்ற காரண பஞ்சாக்கர நிலையில் நிற்கச் செய்து, உனது திருவடி இன்பத்தை நுகருமாறு செய்வாய். ''ஓம் ஆனந்தாய நம'' (கண. சகஸ். 830) ''ஓம் அனந்தானந்த சுமதாய நம'' (கண. சகஸ். 331) என்ற கணபதி நாமங்கள். தனதன்—குபேரன்.

21. திரு—செல்வம்; முத்தியாகிய செல்வம்

திருவாக்கும் — 'ஓம் முக்திதாய நம;' (கண. சகஸ். 87) செய்கருமம் கைகூட்டும்—'ஓம் சித்திபதயே நம;' (கண. சகஸ். 50) பெருவாக்கு—பெருமை (மாட்சிமை) உடைய வாக்கு; மந்திரம். 'ஓம்மந்த்ராய நம ;' (கண. சகஸ். 596); கணபதி மந்திரத் திருமேனியுடையவர்.

பெருவாக்கு - மந்திர வாக்குகள்; ஓங்காரம்; 'ஓம் மந்த்ர பதயே நம :' (கண. சகஸ். 597)

| | |
|---|---|
| ஓம் ஓங்கார மந்த்ராய நம : | (கணேச மூலமந்த்ரத்ரிசதீ 5) |
| ஓம் ஓங்கார பிரணவ ரூபாய நம : | ( ,, 2) |
| ஓம் ஓங்கார மூர்த்தயே நம : | ( ,, 3) |
| ஓம் ஓங்கார கணபதயே நம : | ( ,, 1) |
| ஓம் ஓங்காராய நம : | ( ,, 4) |
| ஓம் ஓங்கார பிந்து ரூபாய நம : | ( ,, 6) |

ஓம் ஓங்கார ரூபாய நம : (கணேச மூலமந்த்ரத்ரிசதீ 7)
ஓம் ஓங்கார நாதாய நம : ( ,, 8)
ஓம் ஓங்கார மயாய நம : ( ,, 9)
ஓம் ஓங்கார மூலாதார வாஸாய நம : ( ,, 10)

போன்ற பல மந்திரங்கள் இங்கு உணர்த்தப்பெறுகின்றன.

பீடு-வலிமை பலம். 'ஓம் மஹாபலாய நம;' (கண. சகஸ். 603)

உருவாக்கும் — சிவயோக நெறியில் நின்று, தன்னைத் தியானித்து நிட்டை கூடும் அன்பர்கட்டு தனது உருவை (சாரூபம்)த் தந்தருள்பவர் கணபதி. 'ஓம் யோகாய நம ;' (கணபதி. சகஸ். 725)

ஆனை முகத்தான்—ஓம் கஜானனாய நம : (சகா. கண. சக. 226)
ஓம் கஜகர்ணா நம : ( ,, 229)
ஓம் கஜபதயே நம : ( ,, 227)
ஓம் கஜரூபதராய நம : ( ,, 232)
ஓம் கஜராஜாய நம : ( ,, 230)

போன்ற பல மந்திரங்களை உணர்த்தி நிற்பது.

22. வினையை வேர் அறுத்தல்—கன்மமல நீக்கம். வேட்கை தணிவித்தல்—ஆணவமல நீக்கம் (வேட்கை—ஆசை; அதற்குக் காரணமான ஆணவமலம்). இது 'ந' கார 'ம'கார நீக்கங்களை உணர்த்துவது. தன்னைத் தியானித்து நிட்டை கூடும் அன்பர்களை 'சிவாய' என்ற காரணபஞ்சாக்கர நிலையில் நிறுத்துபவர் விநாயகப் பெருமான். 'ஓம் யோகாய நம' (கண. சகஸ். 725). 'ஓம் முக்திதாய நம;' (கண. சகஸ். 87) விண்—ஆகாசம்; ஞானவெளி ; மகாகாயம். ''ஓம் மஹாகாய நம :'' (கண. சகஸ். 1007)

விண்ணுக்கு நாதன்—விண்மண்டலமாகிய சாந்தியதீத கலா சக்கரத்துக்குத் தலைவன் ; சதாசிவமூர்த்தி. ''ஓம் சதாசிவாய நம;'' (கண. சகஸ். 760) 'ஓம் ஈசானாய நம' என்ற பஞ்சப்பரம மந்திரங்களில் ஒன்றுமாம். (கண. சகஸ். 404)

மண்ணுக்கு நாதன் — மண்மண்டலமாகிய நிவிர்த்திகலா சக்கரத்துக்குத் தலைவனாகிய பிரம்மா. ''ஓம் ப்ரஹ்ம ரூபிணே நம;'' (கணேச அஷ்டோத்தர சதம். 54). ''ஓம் சதுர்முகாய நம;'' (கண. சகஸ். 863)

கண் — சிவஞானம்; கண்ணிற் பணிதல் — 'ந'கார 'ம' காரங்களை விட்டு நீங்கி 'சிவாய' என நிற்றல். ''ஓம் பஞ்சாக்ஷ ராத்மனே நம:'' (கண. சகஸ். 870)

23. இடர்—துன்பம்; இங்கு அதற்குக் காரணமான ஆணவ மலத்தைக் குறித்தது. இடர் கொடுத்தல்—'ந', 'ம' நீக்கம்

அடிமை கொள்ளுதல் — உயிரினது இச்சை, அறிவு, செயல்களைத் தன்து இச்சை, அறிவு, செயல்களாகத் திகழும்படி செய்தல். 'சிவாய' என்ற நிலையில் நிற்கச் செய்தல். ''ஓம் பஞ்சாக்ஷராத்மனே நம;'' (கண. சகஸ். 870) இது சிவயோக நிலையில் நிற்றலுமாம். 'ஓம் யோகாய நம;' (கண. சகஸ். 725) தன்னை நினைக்கத் தருகின்றான். ''ஓம் யோகாதிபாய நம'' (கண. சகஸ். 113)

24. மலம் நெருப்பை அருந்துகின்ற எறும்பு — ஆணவ மலம் வலியற்றுக் கிடத்தலை உணர்த்துவது. இது உயிர் 'ந', 'ம' நீத்து, 'சிவாய' என நிற்றல். ''ஓம் பஞ்சாக்ஷராத்மனே நம;'' (கண. சகஸ். 870).

## 11. முருகவேள் வணக்கம்

25. முக்கணா போற்றி முதல்வா போற்றி
முருகவேள் தன்னைப் பயந்தாய் போற்றி
தக்கணா போற்றி தருமா போற்றி
தத்துவனே போற்றிஎன் தாதாய் போற்றி
தொக்கணா என்றிருவர் தோள்கை கூப்பத்
துளங்கா தெரிகடராய் நின்றாய் போற்றி
எக்கண்ணும் கண்ணிலேன் எந்தாய் போற்றி
எறிகெடில வீரட்டத் தீசா போற்றி. —6, 5, 10
—திருவதிகை வீரட்டானம், திருத்தாண்டகம். 10

26. காரிலங்கு திருவுருவத் தவற்கும் மற்றைக்
கமலத்திற் காரணற்கும் காட்சி ஒண்ணாச்
சீரிலங்கு தழற்பிழம்பிற் சிவந்தார் போலும்,
சிலைவளைவித் தவுணர்புரம் சிதைத்தார் போலும்,
பாரிலங்கு புனல்அனல்கால் பரமா காசம்
பரிதிமதி சுருதியுமாய்ப் பரந்தார் போலும்,
கூரிலங்கு வேற்குமரன் தாதை போலும்,
குடந்தைக்கீழ்க் கோட்டத்தெம் கூத்தனாரே.
—6, 75, 7; திருக்குடந்தைக்கீழ்க் கோட்டம்
திருத்தாண்டகம்-7

27. நேமியானும் முகநான் குடையந்தெறி அண்ணலும்
ஆமிதென்று தகைந்தேத்தப் போய்ஆரழல் ஆயினான்
சாமிதாதை சரணாகும் என்று தலை சாய்மினோ
பூமிஎல்லாம் புகழ்செல்வ மல்கும் புகலூரையே
—2, 115, 9; திருப்புகலூர், செவ்வழி

28. தழை மயில் ஏறவன் தாதையோதான்
மழைபொழி சடையவன் மன்னு காதில்
குழையது இலங்கிய கோலமார்பின்
இழையவன் இராமன தீச்சரமே. —1, 115, 3
—திரு இராமனதீச்சரம், வியாழக்குறிஞ்சி

29. மாலுலா மனம்தந்(து) என்கையிற் சங்கம்
வவ்வினான்; மலைமகள் மதலை;
மேலுலாந் தேவர் குலமுழு தாளும்
குமரவேள்; வள்ளிதன் மணாளன்;
சேலுலாம் கழனித் திருவிடைக்கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
வேலுலாம் தடக்கை வேந்தன்; என்சேந்தன்
என்னும்என் மெல்லியல் இவளே. —9, 7, 1
—சேந்தனார் திருவிசைப்பா 1, பஞ்சமம்

30. இவளைவார் இளமென் கொங்கைபீர் பொங்க
எழில்கவர்ந் தான்; இளங் காளை;
கவளமா கரிமேல் கவரிசூழ் குடைக்கீழ்க்
கனகக்குன் றெனவரும் கள்வன்;
திளைமா ளிகைசூழ் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
குவளைமா மலர்க்கண் நங்கையானைக்கும்
குழகன்; நல்அழகன்; நம்கோவே. —ஷ-2.

31. கோவினைப் பவளக் குழமணக் கோலக்
குழாங்கள் சூழ் கோழிவெல் கொடியோன்,
காவல்நற் சேனைஎன் னக்காப் பவன், என்
பொன்னை மேகலை கவர்வானே?
தேவின்நற் றலைவன், திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற் கீழ் நின்ற
தூவிநற் பீலி மாமயில் ஊரும்
சுப்பிர மண்ணியன் தானே. —ஷ-3.

32. எம்பெருமான் இறைவா முறை யோஎன்று
வம்பவிழ் வானோர் அசுரன் வலிசொல்ல

அம்பவள மேனி அறுமுகன் போய்அவர்
தம்பகை கொல்என்ற தற்பரன் தானே —10, 520
—2-ஆம் தந்திரம், அதோமுக தரிசனம்-1

33. செய்யமேனிக் கருஞ்குஞ்சி செழுங்கஞ் சுகத்துப்
பயிரவர்யாம்
உய்யஅமுது செய்யாதே ஒளித்த தெங்கே எனத்தேடி
மையல்கொண்டு புறத்தணைய மறைந்த அவர்தாம்
மலைபயந்த
தையலோடும் சரவணத்துத் தயைரோடும் தாம்அணைவார்
—12, 37, 84. சிறுத். நாய. புரா. 48

குறிப்புகள் : (பா. 25—33)

**25.** முருகன் : முருகு - இளமை, மணம், அழகு, தேன், திருவிழா என்ற பல பொருள்களைத் தரும் தமிழ்ச் சொல்.

முருகன்—*(1)* இளமை உடையவன்; *(2)* தெய்வமணம் கமழும் திருமேனியை உடையவன்; அதாவது சிவமணம் கமழ்பவன்; *(3)* பேரழகுடையவன்; *(4)* தன்னை அன்புடன் மனம் உருகி நினைந்து வழிபடுவார்க்குப் பேரின்பமாகிய ஆனந்தத் தேனை அருள்பவன்; *(5)* பெரும் திருவிழாக்கள் எடுத்துப் பூசிக்கத் தகுந்த தேவதேவன்; என்ற ஐந்து பொருள்களைக் கொண்டது இந்தத் திருநாமம்.

''அரும்பெறல் மரபில் பெரும் பெயர் முருக'' என்று நக்கீர தேவர் முருகன் என்னும் திருநாமத்தின் சிறப்பை நமக்கு எடுத்துக் காட்டுகிறார். (திருமுருகாற்றுப்படை 269). மேலும் முருகன் என்னும் திருநாமத்தைத் தம் மனத்துட்கொண்டு ''மணம்கமழ் தெய்வத்து இளநலம் காட்டி'' எனவும் அருளிச் செய்கின்றார். *(1)* மணம் *(2)* விழாக்கள் எடுத்து வணங்கப் பெறும் தெய்வத் (தேவதேவத்) தன்மை *(3)* இளமை *(4)* நலம்-மங்கலம்; நன்மையைத் தருவது; எல்லா நன்மைகளிலும் சிறந்ததாகிய பேரானந்தத்தை அருளுவது ஆகிய நான்கு பண்புகளையும் இது உணர்த்துதலை நாம் காண்கிறோம். நலம் என்பது தேன் என்ற பொருளில் வந்தது.

''முருகு என்பது கட்டிளமை என்னும் பொருள் பயத்தலின் அதனை என்றும் உடைய குமாரன் முருகன் எனப்பட்டான். இவ்விளமை பிள்ளை நீர்மை (பிள்ளைத்தன்மை) குறிக்குமாற்றானே முருகன் என்பது சிவசுதன் (சுதன்—மகன்) என்னும் பொருட்டு என்று உரைக்கலாம். நறுமணத்தோடும் கூடிய தெய்வத் தன்மையும், அழகும், முருகன் எனப்படுமாற்றானே அத்தன்மை

கள் உடையோன் முருகன் எனப்பட்டனன் என்பதுமாம்'' எனவும் ''குகேசனுடைய பலப்பல திருப்பெயர்களுள் சுப்பிரமணியம், குமாரபிரான், முருகன், சிவபாலன் என்பன ''மறைந்துள்ள பரசிவப் பொருளினின்று வெளிப்பட்டு, மிளிர்வது என்னும் பொருளைப் பயக்கும்'' எனவும் பாம்பன் திரு. குமரகுருதாச சுவாமிகள் விளக்கம் தருகிறார். (தகராலய ரகசியம், இரண்டாம் காண்டம், பா. 45 உரை)

''மொழிக்குத் துணை முருகா என்னும் நாமங்கள்'' என்று அருணகிரிநாதர் பாடுகிறார். (கந்தர் அலங்காரம்-70) இங்கு நாமங்கள் என்று பன்மையில் உணர்த்தப்பெறுவன 'முருகன் என்ற தமிழ்த் திருநாமத்துக்கு ஒத்த பொருள் கொண்ட பல வட மொழித் திருநாமங்கள். சுப்பிரமணிய சகஸ்ர நாமாளியிற் காணப் பெறும் நாமங்கள் சிலவற்றைக் காண்போம்.

முருகன் (1) இளையோன்

ஓம் குமாராய நம : என்றும் இளையோன் (154)
ஓம் பாலரூபாய நம : குழந்தை வடிவுடையவன் (593)
ஓம் ஆஜராய நம : என்றும் கிழத்தன்மை இல்லாதவன் (8)

(2) அழகன்

ஓம் அபிராமாய நம : மிக்க அழகுடையோன் (24)
ஓம் காமரூபாய நம : விரும்பத்தக்க அழகான உருவத்தை உடையவன் (153)
ஓம் கோமளாங்காய நம : அழகான உறுப்புகளையுடையவன் (191)
ஓம் ரம்யரூபாய நம : அழகான உருவத்தை உடையவன் (710)
ஓம் ரம்யாய நம : அழகன் (730)
ஓம் ரூபலாவண்ய விக்ரஹாய நம : ஒப்பிலாத சௌந்தர்யமான உருவத்தை உடையவன் (732)

(3) தேன்; ஆனந்தன்

ஓம் ஆனந்தாய நம : ஆனந்தமே உருவாக உடையோன் (53)
ஓம் ஆனந்தனே நம : களிப்பை உடையோன் (56)
ஓம் ஜகதானந்த ஜநகாய நம : உலகுக்கு ஆனந்தம் அளிப்பவன் (323)
ஓம் நித்யத்ருப்தாய நம : நிலைத்த ஆனந்தன் 468)
ஓம் பரானந்தாய நம : மேலான ஆனந்தத்தை உடையவன் (855)
ஓம் சங்கராய நம : பேரின்பத்தைச் செய்பவன் (855)

(4) விழா—உத்ஸவம்

ஓம் உத்ஸவப்ரியாய நம : திருவிழாக்களில் விருப்பம் உடையவன்—(84)

வேள் : விரும்பப்படுபவன். மன்மதனுக்கும் வேள் என்ற பெயர் உண்டு. மன்மதன் கருவேள்; தனது தந்தை திருமாலின் கருமை நிறம் கொண்டவன். முருகப்பிரான் செவ்வேள்; செம்மேனி எம்மானாகிய சிவபிரானது நிறமாகிய செந்நிறத்தை உடையவர். கருவேள் ஆன்மாக்கட்கு மங்கையர் இச்சையை எழுப்புபவன்; சிற்றின்பத்து அழுத்துபவன். செவ்வேள் அவ்விச்சையை நீக்கிப் பேரின்பத்தழுத்துபவர்.

''ஓம் இஷ்டாய நம'' : யாவராலும் விரும்பப்படுகிறவன் (62)

26. வேற்குமரன்: குமரன்-குமாரன்; இளம்பிராயம்உடையவன்; பதினாறு வயதுடையவன். இளையோன் என்றதற்குக் காட்டிய வடமொழி மந்திரங்கள் காண்க. குமாரன் என்ற சொல் பிரமசாரி என்ற பொருளும் தரும். குமாரக்கடவுளின் தேவிகள் இருவரும் கன்னிகள் என்பதை நாம் அறிதல் வேண்டும். ''பவன் பிரமசாரி யாகும், பான்மொழி கன்னியாகும்'' என்பது அருணந்தி சிவனாரின் அருள்வாக்கு. கு - அருவருப்பு, குற்சிதம் என்ற இரண்டையும் குறிக்கும் என்பர் வடநூலார். குற்சிதம்-அசுத்தம், இது ஆணவமாகிய அழுக்கை உணர்த்துவது. மாரன்-நாசம் செய்பவன். குமாரன்-ஆணவமலத்தைப் போக்குபவன்.

அறியாமை ஆணவமலத்தின் காரியம்; ஆணவமல மறைப்பினால் உயிர்களுக்கு உண்டாவது; ஆதலில் குமாரன் என்ற சொல் அறியாமையை போக்குபவன் என்ற பொருளையும் தரும். கு-அஞ்ஞானம்; மாரன்-அழிப்பவன் எனலுமாம். குமாரன் என்ற திருநாமத்தைப் பாம்பன் சுவாமிகள் தமது தகராலய ரகசியம் என்ற நூலின் ஒரு பாடலில் உணர்த்தி, (பா-45) தாமே அதற்குப் பொழிப்புரையும் விளக்க உரையும் தருகிறார்.

அவர் தரும் பொழிப்புரை - 'கு' என்னும் குற்சிதம் மலம் என்னும் அருத்தத்தில் உளதாம். மாரன் என்பது (அம்மலத்தை) அழித்தருள்பவன் என்று பொருந்தும் அருத்தத்தில் உளதாம். அவ்விரண்டும் பொருந்திய தொடர் மொழியே 'குமாரன்' என்னும் பெயர் எனத் தபோதனருடைய நாவினில் தோன்றா உள்ளது. (அங்ஙனமே) பரமானந்த வாரிதி (பெரிய ஆனந்தக்கடல்) எனப்படும் குமரா என்று துதிப்போருடைய துன்பம் நீங்கும்.''

குமாரன் என்ற திருநாமம் ஆணவமலத்தைப் போக்குபவன் எனப் பொருள் தருவதால், அத்திருநாமத்தால் முருகப் பெருமானை அன்புடன் துதிப்பவர்களது ஆணவமலப் பிணியை

நீக்கி, அவர்களைப் பேரானந்தக் கடலில் அழுந்தும்படி அவர் செய்வர்.

ஒரு திருமுகம்; நான்கு திருக்கரங்கள்; வலது கரங்களில் சத்தி (வேல்), வாள்; இடது திருக்கரங்களில் கொடி, கேடயம் ஆகிய வற்றைக் கொண்ட திருவுருவம் கொண்டவர் குமாரசாமி.

சிவபெருமானுக்கு மகேஸ்வர மூர்த்தங்கள் இருபத்தைந்து இருப்பது போல முருகப்பெருமானுக்குப் பதினாறு மூர்த்தங்கள் உண்டு. இவை ஞானசத்திதரர், கந்தர், தேவசேனாபதி, சுப்ரமண்யர், கஜாரூடர், சரவணபவர், கார்த்திகேயர், குமாரர், சண்முகர், தாரகாந்தர், சேனாபதி, பிரமசாத்தர், கல்யாணர், பாலசுப்பிரமணியர், கிரௌஞ்சத்துவஞ்சர், மயூரவாகனர் என்பன. இப்பதினாறு மூர்த்தங்களில் ஒன்று குமாரன் என்ற திருவுருவம்.

ஓம் குமராய நம : (154)

ஓம் அந்த்வஹாரினே நம : குருட்டுத் தன்மையை போக்குபவன் குருட்டுத் தன்மை-அறியாமை; இதற்குக் காரணம் ஆணவ மலம். ஆணவ மலத்தைப் போக்குபவன் என்பதே இதன் உட்பொருள் (சுப். சக. 143)

ஓம் து; கக்நாய நம : துன்பத்தைப் (துன்பத்துக்குக் காரணமான ஆணவ மலத்தைப்) போக்குபவன் (சுப். சக. 432)

ஓம் ப்ராந்தி நாசாய நம : மயக்க அறிவை (இதற்குக் காரணமான ஆணவ மலத்தை) நீக்குபவன் (சுப். சக. 649)

ஓம் அஸ்த மாயாய நம : மாயா மலத்தைப் போக்குபவன். (சுப். சக. 145)

ஓம் கதஹராய நம : பிணிகளைப் (ஆணவம், கன்மம், மாயை, ஆகிய மூன்று பிணிப்புகளைப்) போக்குபவன் (சுப். சக. 227)

போன்ற சுப்ரமணிய நாமங்கள் குமரன் என்ற பொருளில் வருவன.

வேல் : வெல்வது வேல்; யாவற்றையும் வெல்லும் தன்மை யுடையது குமரன் கை வேல். பகையை வெல்வது வேல். உயிர்களது கொடும்பகை ஆணவமலம். அதனை வெல்லும் வேல் ஞானமயமாக இருத்தல் வேண்டும். ஆகவே இறைவனது வேல் ஞானசத்தி. முருகப் பெருமான் கையில் வேல் இருப்பது அவ்விடத்தில் பரிபூரண ஞானம் விளங்குவதைக் காட்டுவது. நம்முடைய அறியாமை, காமம், வெகுளி, மயக்கம் போன்ற தீய குணங்களைப் போக்குவது அவன் வேல். அதாவது இக்குணங் களுக்கு காரணமான ஆணவமலத்தைப் போக்குவது குமரனது

வேல். சூரபன்மனை வேலால் அழித்தது, தனது ஞான சத்தியை அவன்பால் செலுத்தி, அவனது ஆணவமலத்தைப் போக்கி, அவனுக்கு அருள் பாலித்தேயாம். 'சூர் முதல் தடிந்த சுடர் இலை நெடு வேல்' என்பது நக்கீரர் அருள்வாக்கு. (திருமுகாற்றுப்படை. 46). இதில் 'சுடர்வேல்' என்றருளியது அவ்வேல் ஞானசத்தியா தலை உணர்த்துவது.

''மருள்இரிக்கு ஞானசத்தி தரித்தலினால் தணிகைவரை வாழ்க்கை பூண்ட
தருநிகர்த்த குரிசிலுக்கு ஞானசத்தி தரன் எனச் சாற்று நாமம்''

என்பர் கச்சியப்ப முனிவர். (தணிகைப் புரா. குமரேசப் பட. 41). மருள்—ஆணவமலம். இதனைப் போக்குவது ஞான சத்தியாகிய வேல். அதனால் வேற்குமரன் 'ஞான சத்திதரன்' என்ற திருநாமமும் உடையவன் ஆகிறான். (தரன்—தரித்திருப்பவன்).

''பழனிப்பதியில் திருஞானபூரண சக்தி தரித்தருள் பெருமாளே'' என்பது அருணகிரி நாதர் அருள்வாக்கு. ''வேல் கெழு தடக்கைச் சால்பெரும் செல்வ'' என்பர் நக்கீரர். இங்குச் 'செல்வம்' சிவஞானமாகிய செல்வத்தை உணர்த்தி நிற்பது.

முருகப்பெருமான் கையில் தரித்திருக்கும் வேலைப்பற்றிப் பாம்பன் சுவாமிகள் கூறுவது இங்குக் காணத்தக்கது :

''வேல்-வெல்லுதற்குக் கருவியாக உள்ளது. ஸ்காந்த மகா புராண ஸம்பவ காண்டத்து 37-ஆம் அத்தியாயத்து 10, 11 ஆம் சுலோகங்களில் உள்ளபடி குமாரருடைய திருக்கரங்களில் எறிபடை, பெரிய வாள், வச்சிரம், அம்பு, அங்குசம், மணி, மழு, பங்கயம், வில் முதலாய படைகள் இருப்பவும், வேலினை விதந்தது, மணிகண்டனாகிய சிவபிரானது திருக்கரத்தே இச்சை, ஞானம்,கிரியை என்னும் முச்சத்திகளை உணர்த்தும் வடிவிற்றாய் இறைவனது (முருகப்பெருமானது) திருக்கரத்தே சத்தி என இருத்தலாலும், படைக்கல நாயகம் (தலைமை) ஆதலாலும் துரிதம்புரி கிரியினையும் சூரபன்மனையும் அழித்த விறற்பாட்டதாதலானும் என்க''.

மேலும் ''இச்சா ஜ்ஞான க்ரியா சத்திரூப சக்திதரம் பஜே'' என்னும் குமார தந்த்ரம். இந்த ஆகம வசனத்தில் 'இச்சா ஞானக் கிரியாசத்தி ரூபமாக உள்ள சத்தி எனும் வேலைத் தரித்துள்ள சத்திதர சுவாமி எனும் பெயரிய முருகன்'' என்பதனையும், அமர சிம்ஹம் எனும் நிகண்டு ''சக்திதர குமார'' என்று கூறுவதையும் சுவாமிகள் நமக்குக் காட்டியருள்வர். மேலும் ''மற்றை ஆயுதங்

களுக்குச் சத்தி எனும் பெயர் செல்லாது என்பதும் ஓர்க'' எனவும் கூறுவர். (தகராலய ரக. பாயிரம் 7, உரை).

வேலை உணர்த்தும் நாமாவளிகள் :

ஓம் சக்திதராய நம : (சுப். சக. 837)
ஓம் சக்திகராய நம : (ஷடக்ஷரமாலிகா ஸ்தோத்திர சதநாமாவளி-14)
ஓம் வித்யாதராய நம : ஞானமே வடிவான வேலைத் தரித்தவன் (சுப். சக. 778)
ஓம் மஹாசக்தயே நம : சத்தியாகிய வேலாயுதத்தை உடையவன் (சுப். சக. 658)
ஓம் ப்ருஹச்சக்திதநுர்தராய நம : பெரிய சத்தி (வேல்) ஆயுதத்தையும் வில்லையும் கையில் தரித்தவன் (சுப். சக. 658)
ஓம் உதாரதியே நம : பரஞானத்தை உடையவன் (சுப். சக. 97)

குமரன் கையில் தரித்திருக்கும் வேலின் இலை வடிவம் இரு சம அளவுள்ள முக்கோணங்கள் (equilateral triangles) மேலும் கீழுமாக இணைத்து வைத்ததை ஒத்திருப்பது. மேல் நோக்கி இருக்கும் மேல் முக்கோணப்பகுதி பரஞானத்தையும், கீழ்நோக்கி இருக்கும் கீழ் முக்கோணப்பகுதி அபர ஞானத்தையும் உணர்த்துவனவாக உள்ளன. பரஞானம்-மேலான ஞானம் ; இறைவனை அனுபவ வாயிலாக அறிந்து அவனை அடைவிக்கும் ஞானம். அபரஞானம் - வேதம், ஆகமங்கள் ஆகியவற்றால் இறைவனது அருங்குணங்களையும் அவனை அடைதற்குரிய நெறிகளையும் உயிர் தன் அறிவில் அறியும் ஞானம். இங்குப் 'பரஞானத்தை உடையவன்' என்பது வேலாயுதத்தன் இலையின் மேற்பகுதியை உணர்த்தியது. இதுபற்றிய நக்கீரரும் ''சுடர் இலை நெடுவேல்'' என்றருளிச் செய்தனர். (சுடர்-பரஞான ஒளி)

''ஓம் தத்புருஷாய வித்மஹே
சக்தி ஹஸ்தாய தீமஹி
தன்னோ ஸ்கந்த ப்ரசோதயாத்''

என்பது சுப்ரமணிய காயத்ரீ.

**27.** சாமிதாதை : 'ஸ்வாமி' என்ற வடமொழிச் சொல், தமிழில் 'சாமி' என்றாயிற்று. ஸ்வம்-சம்பத்து, செல்வம்; செல்வங்கள் எல்லாவற்றிலும் சிறந்த செல்வம் திருவருட்செல்வம்; சிவஞானம். அதனை அருள்பவர் முருகப்பெருமான் என்பதனை உணர்த்தி நிற்பது 'சாமி' என்ற திருநாமம். எனவே சிவஞானத்தை அருளும் பரம குரு-சாமி; சாமிநாதர். ஞானம் வழங்கும் சாமி எழுந்தருளி இருக்கும் மலையும் சாமிமலை எனப் பெயர்பெற்றது.

(பாம்பன் சுவாமிகள், சுப்பிரமணிய வியாசம், வினா 56-க்கு விடை).

'சாமி' என்ற சொல் எல்லாம் உடையவன் (எல்லாச் செல்வங்களையும் உடையவன்) ; உலகங்கள், உயிர்கள் ஆகிய எல்லாவற்றையும் தனது உடைமைப் பொருளாகக் கொண்டவன்; என்பர் ஞானியாரடிகள்.

'சாமிதாதை' என்றது முருகப்பெருமான் சிவகுமாரன் என்பதை உணர்த்துவது. 'சிவகுமாரன்' என்பதனை உணர்த்தும் வடமொழி நாமங்கள் :—

ஓம் ஈசபுத்ராய நம : (சுப். சக. 72)

ஓம் ஊர்த்வரேதஸ்ஸுதாய நம : அக்னியை வீர்யமாக உடைய சிவபெருமானுடைய நல்ல பிள்ளை (சுப். சக. 98)

ஓம் ஏணாங்கதர ஸத்புத்ராய நம: மூன்றாம்பிறைச் சந்திரனைச் சூடிய சிவபெருமானுடைய நல்ல பிள்ளை (சுப். சக. 120)

ஓம் நடேசபுத்ராய நம : (ஷடக்ஷர, சத, 61)

28. மயில் ஏறவன் : மயிலை ஏறுதல் உடையவன்; மயிலை ஊர்த்தியாகக் கொண்டவன். முருகப் பெருமான் சூரபன்மனை வேலால் அழித்தபோது அவன் உடல் இரு கூறாகி, ஒன்று மயிலும், மற்றொன்று சேவலுமாக நிற்க, எம்பிரான் மயிலைத் தனது ஊர்தியாகவும், சேவலைக் கொடியாகவும் கொண்டான் என்பது கந்தபுராணம் கூறும் வரலாறு; இதனுட் பொதிந்து கிடக்கும் தத்துவத்தைப் பாம்பன் சுவாமிகள் நமக்குக் காட்டுகிறார்.

''சூரபன்மனாகிய அஞ்ஞானானந்தகார ஆணவமலத்தைச் சோதிமயமான எஃகம்(வேல்) எனும் அகண்ட ஞான சத்தியால் இரு கூறாகப் போழ்ந்தபோது, ஒரு கூற்றின் மயில் என வந்த மல வலிமையைத் தூய மாயையின் அதோபாகத்தில் அடக்கி ஊர்தி எனக்கொண்டு அதன்மீது ஆரோகணித்தும், பிறிதொரு கூற்றில் கோழீ என வந்த மலவலியை அம்மாயையின் ஊர்த்துவ யாகத்தில் அடக்கித் தேர்க்கொடி எனத் தன்வயங் கொண்டவன் எனலாம்'' என்பது அவர் வாக்கு (சுப்பிர. வியா. வினா-14)

மேலும் பாம்பன் சுவாமிகள் ''தாமதம், இராசதம், சாத்துவிகம் என்னும் முக்குணமாய் உள்ள பிரகிருதி மாயையும் அதன் காரணமாய் உள்ள அசுத்த மாயையும் என்னை அன்றி இல்லை எனும்படி மேம்பட்டிருக்கிற பரப்பிருக்குதிதான் இளம்பெருமான் இவர்ந்துள்ள மயிலாகும்'' என்கிறார் (தக, ரக. 2-ஆம் காண்டம், பா. 57 உரை)

முக்குணங்களைத் தன்னுட் கொண்டது பிரகிருதி மாயை. இதற்கு முதற்காரணம் அசுத்த மாயை. பிரகிருதி மாயையும், அசுத்த மாயையும் சுத்த மாயையின்றி விளங்கமாட்டா. முருகப் பெருமான் மயில் ஊர்தல், அவர் சுத்த மாயைத் தொழிற்படுத்து பவர் என்பதனை உணர்த்துவது.

''ஓம் ஸிகிவாஹநாய நம'' என்னும் சுப்பிரமண்ய சகஸ்ர நாமாவளி (839) ஸிகி-மயில்; வாகனம்-ஊர்தி.

''ஓம் மயூரவாஹநாய நம: ''என்பது முருகப்பெருமான் அஷ்டமூர்த்தி நியாசங்களில் ஒன்று.

29. மலைமகன் மதலை : பார்வதி குமாரன்

| | |
|---|---|
| ஓம் அத்ரிஜாஸுதாய நம : | பர்வதகுமாரியாகிய பார்வதியின் மைந்தன் (சுப். சக. 13) |
| ஓம் உமாஸுநவே நம : | பார்வதி மைந்தன் (சுப். சக. 96) |
| ஓம் கிரிஜா த்மஜாய நம : | மலைமகள் மைந்தன் (சுப். சக. 225) |
| ஓம் ஔமேயாய நம : | உமா புத்திரன் (சுப். சக. 132) |
| ஓம் அம்பிகாதநயாய நம : | பார்வதி மைந்தன் (சுப். சக. 141) |

போன்ற சுப்பிரமணிய நாமங்களை மலைமகள் மதலை என்ற தமிழ் மந்திரம் உணர்த்துகின்றது.

வள்ளி : வள்ளிமலையில் வள்ளிக்கொடி படர்ந்த இடத்தில் ஒரு மான் ஈன்ற காரணத்தால் 'வள்ளி' என்னும் பெயர் வந்தது. வள்ளி என்பது வடமொழியில் 'வல்லி' என்று சொல்லப் படும். வட சொல்லாகிய 'வல்லி' என்பது வள்ளிக்கொடி என்ற பொருளைத் தரும் (சுப். வியாசம். 47)

வாமனாவதாரனான விஷ்ணு மூர்த்தியின் கண்களில் தோன்றிய இரண்டு பெண்களில் பின்னவளான சௌந்தரவல்லி தொண்டை மண்டலத்தில் வள்ளிக்கிழங்கு மிகவும் உண்டாகும் வள்ளிமலையில் சூக்குமசரீரியாய் நின்று முருகப்பெருமானை நோக்கி அவரைக் கணவனாகப் பெறுமாறு தவம் செய்து வந்தனள். அப்போது அம்மலைக்கருகில் தவம் புரிந்திருந்த ''சிவமுனிவர் தெய்வீகக்காட்சி மாத்திரமான மோகமாய் நோக் குற்றுக் களிப்புற வந்த ஒரு மான் உதரத்தில் பொருந்திய கருவில் சுந்தரவில்லி நுழைந்து ஓர் அழகிய மானுட வடிவப் பெண்ணாய் அவதரித்தனள். அம்மலை வேடர் தலைவனும் தலைவியும் பெண் குழந்தை வேண்டித் தவம் இருந்து வந்தனர். அவர்கள் அந்த மான் பெற்ற பெண் குழந்தையை வளர்த்துவர, முருகப் பெருமான் உலகத்தவர் செய்யும் களவு, கற்பு என்ற இரு திருமண நெறி

களிலே ஒன்றாகிய களவு நெறியில் நின்று அப்பிராட்டியின் வேண்டுகோள் நிறைவு பெறுமாறு அவளை மணம் புரிந்து கொண்டனர். இந்த வரலாறு கந்தபுரான சம்பவ காண்டத்து 36-ஆவது அத்தியாயத்து உள்ளது என்பர். (சுப். வியாசம். 84) இவ்வரலாற்றில் சிவமுனிவர் மகாவிஷ்ணு; பெண்மான் இலட்சுமி என்றும் எடுத்துக்காட்டுவர் பாம்பன் சுவாமிகள்.

வள்ளி முருகப்பெருமானது கிரியாசக்தி; சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு சைவ நெறிகளில் சரியை, கிரியை ஆகிய இரு நெறிகளை விருத்தி செய்யும் சத்தி கிரியா சத்தி என்பர் பாம்பன் சுவாமிகள். இந்நெறிகளாகிய பூக்களை மலர் விக்கும் கொடியே வள்ளிக்கொடி; வல்லி; வள்ளியம்மையார். (சுப். வியா. 47,84)

நல்லகம் குடைந்த செவ்வேற்கந்தன் ஓர் தருவதாகி
வல்லியர் கிரியை ஞானவல்லியின் கிளையாய்ச் சூழப்
பல்லுயிர்க் கருளைப் பூத்துப் பவநெறிகாய்த்திட் டன்பர்
எல்லவர் தமக்கு முத்திஇருங் கனிஉதவும் என்றும்

என்பது கச்சியப்ப சிவாசாரியார் பாடல் (கந்தபுராணம், வள்ளி திருமணப் படலம், பா. 258). இதில் அவர் முருகப்பிரானின் தேவியர் இருவரும் அவரது கிரியை சத்தி, ஞான சத்தி என்பதனை உணர்த்தியருள்கிறார்.

"உள்ளி நாடுறு சேய்க்கின்பம் உகும் தொழிற் றலைவியாம் எம்
வள்ளி நாயகியார் பைம்பொன் மலரடி சென்னி சேர்ப்போம்"

என்கிறது கந்தபுராண தோத்திரப்பா மாலை (சுப்பிரமணிய வியாசம். வினா 84, விடை)

குமரன் கைவேல் ஞானசக்தி என்று சொல்லப்பெறுவதாயினும் இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி என்ற வேற்றுமை காட் டாமல் திகழும் சிற்சத்தியேயாம். (சுப். வியா. 50)

ஓம் மஹா வல்யை நம : ஸ்ரீவல்லி அஷ்டோத்ரம் 1.
ஓம் ஸ்கந்த பார்யாயை நம : ( ,, 35)
ஓம் ஸுந்தர்யை நம : ( ,, 64)
ஓம் புளிந்த கன்யாரமணாய நம : மலைஜாதிப் பெண்ணினுடைய மணாளன் (சுப். சக. 504)

சேந்தன் : சேந்து-சிவப்பு. "செக்கரும் செம்மையும் சேந்து பாடலமும்" என்று பிங்கல நிகண்டு கூறும். சேந்தன்-செந்நிறம் உடையவன்; செந்தழல் வடிவாய் இருப்பவன். இது சோதி வடிவினன் என்பதாம்.

ஓம் குங்குமாங்காய நம : குங்குமப்பூ போன்ற நிறத்தை உடையவர் (சுப். சக. 170)

ஓம் கண்டிதார்காய நம : தனது காந்தியால் சூரியனது ஒளியை மங்கச் செய்பவர் (சுப். சக. 212)

ஓம் சவிச்சதாய நம : பிரகாசக் கொழுந்தாக விளங்குபவர் (சுப்.சக. 295)

ஓம் ஜ்யோதிர்மயாய நம : (சுப். சக. 308)

ஓம் திவ்யாய நம : ஒளிமயமானவர் (சுப். சக. 414)

ஓம் த்வ்யாக்ருதயே நம : ஒளிமயமான சரீரத்தை உடையவர் (சுப். சக. 415)

போன்ற நாமங்கள் 'சேந்தன்' என்ற தமிழ்த் திருநாமத்துக்கு நேர் ஒத்தன.

**30.** நங்கை யானைக்கும் குழகன் : குழ—இளமை; குழகன்—இளையோன்; முருகன்; நங்கையானை — தெய்வயானை; யானைக்குக் குழகன்-தெய்வயானை கணவன் என்ற பொருளில் வந்தது.

மகாவிஷ்ணுவின் இரு புதல்விகளில் முன்னவள் அமிர்தவல்லி என்பவள். குமரப் பெருமானை மணம் செய்துகொள்ள வேண்டி அவள் அவனது ஆறெழுத்து மந்திரத்தைச் செபித்து தவம் இருந்தாள். அவளது தவத்துக்கிரங்கி அவள் முன் தோன்றி அவன் அருளியபடி ஒரு அழகிய பெண் குழந்தை உருக்கொண்டு இந்திரன் பக்கல் சென்றபோது அவன் தனது யானையாகிய ஐராவதத்தினிடம் அதனை ஒப்படைக்க, அது வளர்த்த காரணத்தால் தெய்வயானை என்ற பெயர் பெற்றனள்.

தெய்வயானை முருகப்பெருமானது ஞானசக்தி.

''சைவ குஞ்சரத்தின் ஞானசக்தியாய்த் திகழும் எங்கள்
தெய்வ குஞ்சரியார் செய்பொற் சிலம்படி சிரமேற்
[கொள்வோம்''

என்பது கந்தபுராணத் தோத்திரப் பாமாலைப் பாடலின் ஒரு பகுதி.

ஞான சத்தியாகிய தெய்வயானை யோகம், ஞானம் என்ற இரு நெறிகளையும் உலகில் விருத்தி செய்பவள். (சுப்.வியா. 84)

முருகப் பெருமான் தனது இரு தேவியர்களோடு மயில் மீது இருக்கும் கோலத்தைக் காணும்போது, முருகப்பெருமானைக் கடவுளாகவும், அவனது இரு துணைவியர்களை, ஞானசத்தி, கிரியாசத்திகளாயும், முருகன் வேலினை இச்சா சத்தியாகவும்

பாவித்து, அவர் ஏறும் மயிலை, முருகப்பெருமான் திருவடிகீழ் இருந்து, முருகனது இச்சை, அறிவு, செயல்களைத் தனது இச்சை அறிவு, செயல்களாகக்கொண்டு, முருகப் பெருமானுடன் ஒன்றி நின்று அவனது பேரின்பத்தை நுகரும் உயிராகவும் பாவித்து வழிபடவேண்டும் என்பர் ஞானியார் சுவாமிகள். (ஞானியார் சொற்பொழிவுகள்).

| | | |
|---|---|---|
| ஓம் தேவசேனாய நம : | (ஸ்ரீ தேவசேனா அஷ்டோத்ரம் | 2) |
| ஓம் மஹாலக்ஷ்ம்யை நம : | ( ,, | 9) |
| ஓம் ஸரஸ்வத்யை நம : | ( ,, | 12) |
| ஓம் மஹேஸ்வர்யை நம : | ( ,, | 20) |
| ஓம் உமாயை நம : | ( ,, | 74) |
| ஓம் மனோன்மண்யை நம: | ( ,, | 88) |

**31.** கோழிவெல் கொடியோன் : வெற்றி பொருந்திய கோழிக் கொடியை உடையவன். கோழி வடமொழியில் 'குக்குடம்' என்று சொல்லப்படும். கோழிக்கொடியோன்—குக்குடத்துவஜன். துவஜம்-கோடி; கு-பூமி; குடம்-வக்கிரமாகக் கிளைத்தல். பூமியைக் காலாற் கிளைக்கும் தன்மை உடைய பறவையாகிற கோழி, குக்குடம் எனப் பெயர் பெற்றது.

முருகப்பெருமான் சூரபன்மனைத் தமது ஞான சத்தியாகிய வேலால் இருகூறாகச் செய்தபோது கோழி என வந்த மாவலியைச் சுத்தமாயையின் மேல்பாகத்தில் அடக்கி அதனை முருகப்பெருமான் தனது தேர்க்கொடியாகக் கொண்டனர். (சுப். வியா. 14)

மயிலாகிய அவனது மலவலியை அதோடபாகத்தில் முருகப் பெருமான் அடக்கினார் என்பதனையும் முன்னர்க் கண்டோம். பாம்பன் சுவாமிகள் மாயையின் உத்தராகம் என்று குறிப்பிட்டது சுத்த மாயையினின்றும் முதற்கண் தோன்றும் நாதத்தையும், அதோபாகம் என்றது அந்நாதத்தினை அடுத்துத் தோன்றும் விந்துவையும் உணர்த்துவனவாம்.

''அஞ்ஞான வல்லிருள்போய் அன்பர் குணக்குன்றின்மிசை
மெய்ஞ்ஞான பானுவெளி தோன்றச்—செஞ்ஞான
நாதத்தொலி' கூவும் நற்கொடிப் போரூரன் இரு
பாதத்தை நெஞ்சே பணி''

(திருப்போரூர் சன்னிதிமுறை, மாலை, பா. 65) எனவும்.

''காலும் தீபம் மினல் பந்தம் கடிகூர்விறிசு கதிர்மதிபோல்
காட்டும்ஒளியாய் இவையாவும் கடந்தாங் கழிவில்
பேரொளியாய்ச்
சாலவிளங்கும் விந்துஎனும் தடமாமயிலோய் தாலேலோ''

எனவும் (ஷ. பிள்ளைத்தமிழ். தால், 3) வரும் சிதம்பர சுவாமிகள் பாடற்பகுதிகளால் கோழி நாதத்தையும், மயில் விந்துவையும் உணர்த்தி நிற்பனவாதல் அறியப்பெறும்.

இவ்வாறு மயிலை ஊர்தியாகவும், கோழியைக் கொடியாகவும் எம்பெருமான் கொண்டது, அவன் சுத்தமாயையால் உயிர்களது ஆணவமலப் பிணியை நீக்கி ஆட்கொள்வதை உணர்த்துவது.

முருகப்பெருமானது வலது திருக்கரங்கள் ஆறனுள் ஒன்றில் இருப்பது கொடி. இக்கொடி கோழி, மயூரம், ஆண்டலை என மூவகைப்படும். கோழிக்கொடி போன்று நம் பெருமானுக்கு மயிற் கொடியும், ஆண்டலைக் கொடியும் உண்டு என்பர். விடை ஏறும் சிவபெருமானுக்கு விடைக்கொடி; சிங்கம் இவர்ந்த உமை அம்மைக்குச் சிம்மக்கொடி; கருடனை ஊர்தியாகக்கொண்ட திருமாலுக்குக் கருடக்கொடி; அன்னம் ஊரும் பிரமனுக்கு அன்னக்கொடி. இவைபோன்று, மயிலேறும் பெருமானுக்கு மயிற் கொடி உண்டு என்பர். ஆண்டலை என்பதுதலைமட்டும்ஆண்மகன் தலையாக ஏனைய உறுப்புகள் எல்லாம் பக்ஷியின் வடிவம் உடையது.

நக்கீர தேவர் திருமுருகாற்றுப்படையில் இந்த மூன்று கொடி களையும் நமக்கு உணர்த்துகிறார்.

> ''கோழி ஓங்கியவென்றடு விறற்கொடி
> வாழீயபெரிதென் றேத்தி'' —(குருகு-38,39)
>
> ''வாரணக்கொடியோடு வயிற்பட நிறீஇ'' ( ,, 219)
> (வாரணம்—கோழி)
>
> ''பல்பொறி மஞ்ஞை வெல்கொடி அகவ'' (முருகு 122)
> (பல்பொறி-பல நிறங்களை உடைய பீலி; மஞ்ஞை-மயில்; வெல்கொடி-வென்று மேலே எடுத்த கொடி; அகவுதல்—ஒலித்தல்)
>
> ''ஆண்டலைக்கொடியொடு மண்ணி அமைவர'' (முருகு-227)
> (அமைவர மண்ணி-பொருந்த அலங்கரித்து)

ஓம் குக் குடத்வஜாய நம : கோழிக் கொடியை உடையவன்
(சுப். சக. 173)

ஓம் குக்குடதராய நம : கோழிக் கொடியைத் தாங்குபவன்
(சுப். சக. 167)

என்ற வடமொழி மந்திரங்கள் கோழிக் கொடியைப் போற்றுவன.

சுப்பிரமணியன் : சுப்பிரமணியன் என்ற திருநாமத்தின் பொரு ளைப் பாம்பன் சுவாமிகள் தகராலய ரகசியம் இரண்டாம்

காண்டத்துப் பாடல் ஒன்றில் (பா. 43) தெளிவாக உணர்த்து கிறார்கள். 'ஸுப்ரஹ்மண்யம்' என்ற வட சொற்றொடர் 'ஸு' 'ப்ரஹ்ம', 'ந்யம்' என்ற மூன்று சொற்களால் ஆயது. 'ஸு' ஸுகம்; பரிசுத்த சுகம் என்னும் ஆனந்தம்; 'ப்ரஹ்ம'-பெரிய பொருள்; வியாபகப் பொருள், கட்புலனாகாத இணையற்ற சிதா காசம்; 'ந்யம்'-வேறு காணப்படும் ஒன்று; அதாவது அவ்வியத்தம் எனும்படி மறைந்துள்ள பெரிய பொருளினின்றும் வெளிப்பட்டு மிளிர்வது. (அவ்வியத்தம்-வெளிப்பட்டு விளங்கிக் காணப் படாதது) 'ந்யம்' என்பது புணருங்கால் 'ண்யம்' என்று திரிந்தது. 'ஸுப்ரஹ்மண்யம்' என்பது சுவானுபூதிச் செல்வர்களுக்கு அவ்வனுபூதிப் பொருளாய்ப் பிரகாசிப்பது.

எனவே ஸு-ஆனந்தம்; ப்ரஹ்ம-எங்கும் நிறைந்துள்ள சிதா காசம், (சிற்பரவியோமம், பரஞானவெளி, சிதம்பரம், திருச் சிற்றம்பலம்) அதில் உள்ள பரவஸ்து, அல்லது பரப்பிரமத்தை உணர்த்தி நிற்பது. இப்பரப்பிரஹ்மம் சிவம்; ஆனந்தம் வெளிப் படாது தன் நிலையில் ஆனந்த சொரூபமாய் இருப்பது; ந்யம்-- அந்த ஆனந்த சொரூப பரவஸ்துவினின்றும் வெளிப்பட்டுத் தோன்றி பரஞ்சோதியாய்ப் பிராகிப்பது. எனவே சுப்பிரமணியன் என்ற திருநாமம் ஆனந்தமே தனது வடிவாக உள்ள சிவத்தி னின்றும் வெளிப்பட்டுத்தோன்றிய பரஞ்சோதியை உணர்த்துவது.

''ஆநந்தம் ப்ரஹ்ம'' என்னும் தைத்ரீய உபநிஷதம். இங்குப் 'ப்ரஹ்ம' என்றது பரப்பிரம்மாகிய சிவத்தை; ஆனந்தம் சிவத்தின் குணம் ; அவனது சத்தி, ஆனந்தம்—பேரானந்தம் : அப்பேரின்பமே தனது வடிவமாக (திருமேனியாக) உடையவர் சிவன். சுத்தான்மாக்களுக்குப் பேரின்பத்தை அருள்பவர் சிவன். சிவன் என்ற சொல்லுக்கே பேரின்ப காரணன் என்ற பொருள் உண்டு. எனவே ''ஸுப்ரஹ்மண்யம்' என்ற திருநா மத்தில் ஸு—ஆனந்தம், சத்தி 'வ'; ப்ரஹ்மம்—எங்கும் நிறைந் துள்ள சிதாகாசமாகிய பரஞானவெளியில் உள்ள பரப்பிரம்மம்; சிவம்—சி; நயம். சிவனது ஆனந்தத்தை அனுபவித்து நுகர்ந்து, தன்னை மறந்து தன் நாமம் கெட்டு அதில் அழுந்தி ஒடுங்கி நிற்கும் சுத்தமான்மாவாகிய 'ய' எனவே சுப்ரமண்யன் என்ற திருநாமம் மகாகாரண பஞ்சாக்கரமாகத் திகழ்தல் காணப்பெறும். சிவனது மூர்த்தமாகிய சோமாஸ்கந்த மூர்த்தத்தில் சிவனுக்கும் உமை அம்மைக்கும் நடுவே மறைந்து ஆனந்த சொரூபியாய் நிற்பவன் ஸ்கந்தன். சுத்தான்மாவினது இந்த மகாகாரணகாரண பஞ்சாக் கர('சிவ') அனுபவ நிலையையே உணர்த்திநிற்பது சோமாஸ்கந்த மூர்த்தம்.

'ஓங்காரத்தின் பொருள் சதாசிவன்' என்னும் பொருளில் சாம வேதம் 'ஸதாசிவோம்' என்று கூறும். அதுபோன்று அவ்வேதம் ஓங்காரத்தின் பொருள் சுப்பிரமணியன் என்னும் பொருளில் ''ஸுப்ரஹ்மண்யோம், ஸுப்ஹ்மண்யோம், ஸுப்ரஹ்மண் யோம்'' என்று மும்முறை மொழியும்.

''எக்கலைக்கும் பூதங்கள் எவற்றினுக்கும்
பிரமனுக்கும் ஈசன் என்னத்
தக்கமுதற் பரப்பிரமம் சதாசிவன் ஓம்
எனவேதம் சாற்றும்; அல்லால்
முக்கனல் சூழ் வேள்வியிற்சுப் பிரமணியன்
ஓம் எனவும் முக்காற் கூறும்''

என்று இதனைச் சிவஞான சுவாமிகள் நமக்கு எடுத்துக்காட்டு கிறார். (காஞ்சிப்புராணம், குமரகோட்டப் படலம், 16)

''வேதத்தில் ஸுப்ரஹ்மண்யோம் என்றுள்ளபடி நீயும், ஸதாசிவோம் என்றுள்ளபடி யாமுமே, அந்தப் பிரணவப் பொருள் ஆகின்றோம் என்று அறிபவர்கள் எவர்களோ அவர்கள் எமக்குச் சமம் ஆவார்கள் (சிவ சமத்துவ முக்தியை அடைவார்கள்)''என்று குமாரமூர்த்தி முன்னிலைக்கண் பரமசிவன் பகர்ந்தனன்'' என்று வடமொழி ஸ்காந்த புராணம் சம்பவ காண்டத்து 34-ஆம் அத்தியாயம் கூறுவதைப் பாம்பன் சுவாமிகள் நமக்கு உணர்த்து கிறார். (தகராலய ரகசியம், 2-ஆம் காண்டம், பா. 45 உரை)

ஓம் ஹ்ரீம் ஸுப்ரஹ்மண்யாய நம : (1)
ஓம் ஹ்ரீம் அமிதாநந்த போதாந்த நாதாந்த ஸ்தித மண்டலாய நம : (64)
ஓம் ஹ்ரீம் அகண்ட சுத்த சைதன்ய ஸ்வரூபாய நம : (65)
ஓம் ஹ்ரீம் ஆதிமத்யாநந்த ரஹித ப்ரஹ்மாநந்த நிதயே நம : (67)
ஓம் ஹ்ரீம் அவ்யயாநந்த நவிக்ஞாந ஸுகதாய நம : (95)
ஓம் ஹ்ரீம் பாரநந்த ஸ்வரூபார்த்த போதகாய நம : (97)

போன்ற ஸ்ரீ சுப்ரமண்ய சித்த நாமாஷ்டோத்ர சதநாமாவளிகள் 'ஸுப்ரமண்யம்' என்ற திருநாமத்தை விளக்குவனவாக அமைந் துள்ளன.

''ஓம் ஹ்ரீம் ஸ்ரீம் ஐம் க்லீம் ஸௌம் ஸ்ரீ ஸுப்ரஹ்மண்யாய நம'' என்பது பீஜங்களோடு கூடிய சுப்பிரமண்ய மந்திரம்.

ஓம்-பரமாத்ம ரூபம்; ஹ்ரீம்-பூமி; ஸ்ரீம்-தனம், ஐம்-வாக்கு; க்லீம்-ஜகன்மோகனம்; ஸௌம்-காயபலம். இவ்வாறு இந்த 5 பலன்களையும் தருவன இந்த 5 பீஜங்கள். இந்த 5 பீஜங்களுடன்

சுப்ரமண்ய மந்திரத்தைச் செபிக்கின், இந்த 5 பலன்களையும் பெறலாம். (பரிபூரணானந்த போதம்; துறவற விளக்கப்படலம். பா. 95 உரை)

32. ஆறுமுகன் : இறைவனது சிற்சத்தியாகிற சிவசத்தியின் முகம் ஒன்றும், சிவனுடைய முகம் ஐந்தும் ஆக ஆறு திருமுகங் களை உடையவன் ஆறுமுகன்; ஷண்முகப் பெருமான். சிவனுடைய (சதாசிவனுடைய) முகங்கள் ஈசானம், தற்புருஷம், அகோரம், வாமதேவம், சத்தியோஜாதம் ஆகிய ஐந்துமாம். இவை முறையே மேலேயும், கிழக்கு, தெற்கு, வடக்கு, மேற்கு என்ற நான்கு திக்குகளை நோக்கியும் இருப்பன; சித்சத்திமுகம் கீழ்நோக்கிய முகம்; அதோமுகம்.

இந்த முகங்கள் ஆறும் ஆறுவகைச் சத்திகளின் கூறுகளாக உள்ளன.

| | | சத்தி கூறுகள் | | ஆதி தெய்வங்கள் |
|---|---|---|---|---|
| **அதோமுகம்** | — | சிற்சக்தி | — | மகாசதாசிவர் |
| ஈசானம் | — | பராசக்தி | — | சதாசிவர் |
| **தற்புருடம்** | — | ஆதிசக்தி | — | மகேசுவரர் |
| அகோரம் | — | இச்சாசத்தி | — | உருத்திரர் |
| **வாமதேவம்** | — | ஞானசக்தி | — | திருமால் (விஷ்ணு) |
| **சத்யோஜாதம்** | — | கிரியாசத்தி | — | அயன் (பிரமன்) |

அதோமுகம் சிற்சத்தியை உணர்த்தி நிற்பது என்பதனைத் திருமூல தேவரும் நமக்கு எடுத்துக்காட்டுகிறார்.

''அதோமுகமாகிய அந்தமில் சத்தி
அதோமுகமாகி அமர்ந்திருந்தாரே''

என்பது அவர் அருள்வாக்கு (திருமந்திரம். 525; இரண்டாம் தந்திரம் அதோமுக தரிசனம்; பா. 6)

எனவே அறுமுகப் பெருமானை வழிபடுவதால் நாம் மேலே கூறிய 6 சத்திகளையும், 6 அதிதெய்வங்களையும் வழிபட்ட பயனைப் பெறுகிறோம்.

அறுமுகத் தலைவனது ஆறுமுகங்களும் ஆறு சுத்ததத்துவங் களையும் (சாதாக்கிய தத்துவங்களையும்) உணர்த்துவதாக உள்ளன. மேலும் அறுமுகப் பெருமானது ஆறுமுகங்களில், ஐந்து திருமுகங்கள் படைத்தல், காத்தல், ஒடுக்குதல் (அழித்தல்), மறைத்தல், அருளல் ஆகிய ஐந்து தொழில்களைச் செய்யும் சிவசத்திகள். அதோமுகம் ஞானமே வடிவான சிவசத்தி

| | | | |
|---|---|---|---|
| அதோமுகம் | — | மகா சாதாக்கியம் | ஞானவடிவம் |
| ஈசானம் | — | சிவசாதாக்கியம் | அருளல் |
| தற்புருடம் | — | அமூர்த்தி சாதாக்கியம் | மறைத்தல் |
| அகோரம் | — | மூர்த்தி சதாக்கியம் | ஒடுத்தல் |
| வாமதேவம் | — | கர்த்திரு சாதாக்கியம் | காத்தல் |
| சத்யோஜாதம் | — | கன்ம சாதாக்கியம் | படைத்தல் |

ஷண்முகப் பெருமான் திருமுகங்கள் ஆறும் அவர் பிரணவ (ஓங்கார) வடிவுடையவர் என்பதனையும், அவர் ஓங்காரத்தின் உட்பொருளாய் உள்ளவர் என்பதையும் உணர்த்திநிற்பன. 'ஓம்' என்ற பிரணவத்திற்குப் பல்வேறு கலைகள் (கூறுகள்) சாத்திரங் களில் கூறப்பெறும். இவற்றுள் பஞ்சகலைப் பிரணவமும் ஒன்று. இப்பிரணவம் ஐந்து கூறுகள் உடையது; இவை அகாரம், உகாரம்; மகாரம். விந்து; நாதம் என்ற ஐந்துமாம். இப்பிரணவம் ஐங்கலை வியட்டிப் பிரணவம் என்று சொல்லப்பெறும். இவை ஐந்தும் சேர்ந்ததே 'ஓம்' என்ற பிரணவம். 'ஓம்' என்ற சமட்டிப் பிரணவமே அதோமுகம். அது குடிலை; சுத்தமாயை,

''ஓம் எனப்படும் குடிலையே ஒப்பிலா முருகன்
மாமுகத்துள் ஒன்றாம்; அவன் தன்மை யார் வகுப்பார்''

என்று கந்தபுராணம் கூறும். எனவே அறுமுகப்பிரான் ஆறு முகங்களில்,

| | | |
|---|---|---|
| அதோமுகம் | — | ஓம், (குடிலை, சுத்தமாயை) |
| ஈசானம் | — | நாதம் |
| தற்புருடம் | — | விந்து |
| அகோரம் | — | மகாரம் |
| வாமதேவம் | — | உகாரம் |
| சத்யோஜாதம் | — | அகாரம் |

அகாரம், உகாரம், மகாரம், விந்து, நாதம் ஆகிய பிரணவ கலைகள் ஐந்தினுக்கும் அதிதெய்வங்கள் முறையே அயன், மால், உருத்திரர், மகேசர், சதாசிவர் ஆகிய ஐவருமாம், சமட்டிப் பிரணவ அதிதெய்வம் சிவசத்தியின் கூறாகிய சதாசிவர்.

சதாசிவ மூர்த்தியினது ஐந்து திருமுகங்களையும், சத்தியின் திருமுகத்தையும் உடையவன் ஆறுமுகன். இதனை ''நம் குமாரன் உனது சுவரூபத்தையும் எமது சுவரூபத்தையும் கொண்டு ஆறுமுகன் எனப்படுகின்றனன்'' என்று வடமொழிக் கந்த புராணம் கூறுகிறது. (ஸம்பவகாண்டம், 35-வது அத்தியாயம், 8-ஆம் சுலோகம்). இது சிவபெருமான் பார்வதியம்மையாருக்குச் சொல்லியதாக அப்புராணத்தில் காணப்படுவது.

''நன்முகம் இருமூன்றுண்டாம் நமக்கவை தானே கந்தன்
தன்முகம் ஆகி உற்று''

என்று தமிழ்க் கந்தபுராணமும் இவ்வாறே கூறுகிறது.

சத்தியோடு என்றும் பிரியாது கூடி இருக்கும் சிவனுக்கும் ஆறுமுகப்பெருமானுக்கும் வேற்றுமை இல்லை என்பது இதனால் அறியப்பெறும்.

அறுமுகன் சிவனே என்பதை அதர்வசிரோபநிடதமும் உணர்த்துகின்றது. அது ''மகேசுரனுமவர், உமையவர், விநாயகனுமவர், கந்தனுமவர்'' என்று கூறுகிறது. ''யச்ச மஹேச்வர; யாசோமா; யச்சவிநாயகா; யச்சஸ்கந்த'' என்பது அந்த உபநிடத வாக்கு, (தகராய ரகசியம், பாயிரம், பா, 2 உரை)

''தூவி மாமயில் ஊர்பவன் சுடர்மதி அணிந்தோன்;
தேவ யானையே திருந்திழை உமையவள் ஆமால்''

என்று இலிங்கபுராணம் கூறுவதையுங் பாம்பன் சுவாமிகள் நமக்கு எடுத்துக் காட்டுகிறார்.

அறுமுகன் உருவத் தியானம் : ''திவ்யமான செந்நிறம் உடைய ஆறு திருமுகங்களை உடையவராயும், 12 கண்களை உடையவராயும், 12 திருக்கரங்களை உடையவராயும், அத்திருக்கரங்களில் வச்சிரம், வில், கேடயம், வரம், பத்மம், சூலம், பாணம், அபயம், சத்தி, கதை, கட்கம், துவஜம் என்னும் இவைகளை உடையவராகவும், மயில் வாகனத்தை உடையவராயும் உள்ள அறுமுக வடிவத்தை நான் தியானிக்கிறேன்'' என அறுமுகன் வடிவைத் தியானிக்கவேண்டும் என்று பரார்த்த நித்திய பூஜாவிதி கூறுகிறது. (அறுமுகப்பிரான் கையில் ஏந்தும் படைகள் 12-ம் பல நூல்களில் பல்வேறு விதமாகக் கூறப்படுகின்றன.)

அறுமுகப்பிரானுக்குக் கண்கள் பதினெட்டு என்றே வடமொழிக் கந்தபுராணம் கூறுகின்றது என்பதனைப் பாம்பன் சுவாமிகள் எடுத்துக் காட்டுவர், (தகராலய ரக. 2-ஆம் காண். பா. 60 உரை)

''இரண்டு திருவடிகளையும், 12 தோள்களையும் உடைய சண்முகப்பெருமானுக்கு 18 கண்கள்'' (சம்பவ காண். 28-ம் அத்.)

''ஆறு திருமுகங்களும், 12 புயங்களும், 18 விழிகளும் உடைய திருமேனியானது உலக அனுக்கிரக நிமித்தமாக அங்கீகரிக்கப்படுகின்றது'' (சம்பவ காண். 35-ஆம் அத்.)

''ஆறு திருமுகங்களையும், 18 நேத்திரங்களையும், 12 ஆயுதங்கள் தரித்த 12 கைகளையும் உடையவன் இளம் பெருமான்'' (சம்பவ காண். 41-ஆம் அத்.)

ஆறுமுகப்பிரானுக்கு மறைந்துள்ள நெற்றிக் கண்கள் ஆறு உண்டு. இவற்றை நீக்கி அவர் 12 கண்களை உடையவராகப் பேசப்பெறுவர். ''பன்னிரண்டு கண்ணுடைய பிள்ளை தோன்றும்'' என்பது அப்பர் அடிகள் அருள்வாக்கு.

சிவபெருமானுக்குரிய அருட்குணங்கள் எட்டு. அவை

முற்றுணர்வு (சர்வஞ்ஞதை)
வரம்பில் இன்பம் (திருப்தி)
தன்வயம் (சுவ தந்திரதை)
பேரருள் (அனுப்த சத்தி)
முடிவில் ஆற்றல் (அனந்த சத்தி)
இயற்கை உணர்வு (அநாதி போதம்)
இயல்பாகவே பாசம் இன்மை (நிராமயம்)
தூய உடம்பினன் ஆதல் (விசுத்த தேகம்)

இவற்றுள் இயல்பாகவே பாசங்களின்மையைத் தன்வயத்திலும், தூய உடம்பினுள் ஆதலை இயற்கை உணர்விலும் அடக்கி, முற்றுணர்வு, வரம்பில் இன்பம், தன்வயம், பேரருள், முடிவில் ஆற்றல், இயற்கை உணர்வு ஆகிய ஆறுமே இறைவன் அருட்குணங்கள் என்பர். இந்த ஆறு அருட் குணங்களையும் ஆறு முகங்களாகக் கொண்டவரே அறுமுகப்பெருமான் என்று கந்தபுராணம் கூறும்.

ஏவர்தம் பாலும் இன்றி எல்லைதீர் அமலற்குள்ள
மூவிரு குணனும் செய்க்கு முகங்களாய் வந்ததென்ன
பூவியல் சரவணத் தண்பொய்கையில் வைகும் ஐயன்
ஆவிகள் அருளுமாற்றால் அறுமுகம் கொண்டான் அன்றே.

—உற்பத்தி காண். திருஅவதாரப்படலம் 94.

வடமொழி மந்திரங்கள் :

1. ஓம் ஷண்முகாய நம : (சுப் சக. 86)
 ஓம் த்வாதசாக்ஷாய நம : பன்னிரண்டு கண்களை உடையவன் (சுப். சக. 405)

 ஓம் ஹஸ்த சித்ராயுத தராய நம : பன்னிரண்டு திருக்கைகளிலும் பல்வேறு அழகிய ஆயுதங்களை உடையவன் (சுப். சக. 950)

 ஓம் பரானந்தாய நம : (சுப். சக. 517)

ஓம் நித்யானந்தாய நம : (சுப். சக. 477)
ஓம் ஸர்வதோமுகாய நம : (சுப். சக. 905)

என்ற 6-ம் அதோமுக சகஸ்ரநாமாவளியிற் சில.

2. ஓம் சங்கராய நம : பேரின்பத்தை அருள்பவன் (ஈ. நா. 64)
ஓம் விஸ்வேச்வராய நம : (ஈ. நா, 267)
ஓம் ஸ்கந்த சிவாய நம : (ஈ. நா. 508)
ஓம் குரு சிவாய நம : (ஈ. நா. 590)
ஓம் அம்ருதாய நம : (ஈ. நா. 754)
ஓம் நமச்சிவாய நம : (ஈ. நா. 901)

ஆகிய 6-ம் ஈசான முக சகஸ்ரநாமங்களிற் சில.

3. ஓம் மஹேசாய நம : (தத். நா. 27)
ஓம் பசுபதேயே நம : ( ,, 46)
ஓம் வாயுஸ்வரூபிணே நம : ( ,, 333)
ஓம் தத்புருஷாய நம : ( ,, 293)
ஓம் நிர்மலாய நம : ( ,, 581)
ஓம் ஆதிதேவாய நம : ( ,, 983)

ஆகிய 6-ம் தற்புருடமுக சகஸ்ரநாமங்களிற் சில,

4. ஓம் ஏகருத்ராய நம : (அகோ. நா. 46)
ஓம் அகோராய நம : ( ,, 148)
ஓம் ப்ரளயாய நம : ( ,, 298)
ஓம் லிங்கோத்பவாய நம : ( ,, 529)
ஓம் காலாக்நயே நம : ( ,, 582)
ஓம் தேஜோமண்டல நாதாய நம : ( ,, 711)

என்ற 6.ம் அகோரமுக சகஸ்ரநாமாவளியிற் சில.

5. ஓம் வாமேநாய (வாம. நா. 91)
ஓம் கல்யாண ரூபாய : ( ,, 425)
ஓம் ஜகத்ரக்ஷணாய நம : ( ,, 653)
ஓம் வாசுதேவாய நம : ( ,, 763)
ஓம் விஷ்ணவே நம : ( ,, 888)
ஓம் கோவிந்தாய நம : ( ,, 289)

என்ற 6-ம் வாமதேவமுக சகஸ்ரநாமங்களிற் சில.

6. ஓம் பவாய நம : (சத்யோ. நா. 2)
ஓம் தரணயே நம : ( ,, 179)
ஓம் விஸ்வ பவாத்மநே நம : ( ,, 357)
ஓம் ஜநநாய நம : ( ,, 432)

ஓம் ஸ்தூலிநே நம : (த்சயோ.நா.808)
ஓம் நாதரூபிணே நம : ( ,, 929)

என்ற 6-ம் சத்தியோசாதமுக சகஸ்ரநாமங்களிற் சில.

மேலே காட்டிய 36 சண்முக சகஸ்ரநாமங்களும் 'ஆறுமுகன்' என்ற ஒரு தமிழ் திருநாமத்தால் உணர்த்தப்பெறுவன.

இந்த 36 நாமங்களையும் அந்தந்த முகங்களில் தியானித்து ஆறுமுகப்பெருமானை அர்ச்சித்தல் நன்று.

ஓம் தத்புருஷாய வித்மஹே
மஹா ஸேநாய தீமஹி
தந்நஷ் ஷண்முகப் பிரசோதயாத்

என்பது சுப்பிரமணிய காயத்திரி. இது "தற்புருட ஷண்முகனை அறிவோமாக; மகாசேனனைத் தியானம் செய்யக்கடவோம்; நமது எண்ணத்தைச் சண்முகன் நிறைவேற்றி அருள்க" எனப் பொருள் தருவது.

காயத்ரி-கயா என்னும் பிராணனைக் காப்பது.
(தகராலய ரகசியம், 2-ஆம் காண். பக்கம் 58 உரை)

33. சரவணத்துத் தனயன் : தனயன்-புத்திரன்; சரவணத்து உதித்த புத்திரனான முருகப்பெருமான். இது சரவணபவன் என்ற முருகன் திருநாமத்தை உணர்த்தி நின்றது. சரவணம்-நாணற் புற்கள் சுற்றிலும் செறிந்துள்ள பொய்கை. பவன்-தோன்றினவன். சரம்-நாணற்புல்; வநம்-செறிவு. ரகரத்தின் முன் வந்த 'ந'கரம் வடமொழியில் 'ண' எனத் திரியும் என்பர் ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள். 'நார' 'அயநம்' ஆகிய இரு வடமொழிச் சொற்களும் சேரும்போது 'நாராயணன்' என்று நிற்றலும், 'ராம'+'அயனம்'-ராமாயணம் என நிற்றலும் காண்க. ச-மங்களம்; ர-ஒளி; கொடை; 'வ'-சாத்துவிகம். 'ந'-போர் எனப் பொருள் கொண்டு, இவைகளோடு தோன்றியவன் 'சரவணன்' என்ற பொருளையும் காண்பர் திரு. சுவாமிகள். (சுப். வியாசம் 88)

சிவபெருமானது 5 முகங்கள் அதோமுகத்தோடு ஆறுமுகங்கள் ஆனவைபோல், சிவபெருமானது திருநாமமாகிய அஞ்செழுத்துடன் நாதப்பிரம்மாகிய பிரணவமும் சேர்ந்து 'ஓம் நமச்சிவாய' என நிற்கும் தூலபஞ்சாக்கரமே 'சரவணபவ' என்ற ஆறெழுத்து மந்திரம் ஆயிற்று. இந்த ஆறெழுத்துக்கள் 'ஷடக்ஷரம்' என்று சொல்லப்பெறும். இதனைக் கந்தபுராணப் பாடல் ஒன்று நமக்கு உணர்த்துகிறது.

நன்முகம் இருமூன் றுண்டால்; நமக்கவை தாமே கந்தன்
தன்முகம் ஆகியுற்ற தாரகப் பிரமம் ஆகி
முன்மொழி கின்றநந்தம் மூவிரன் டெழுத்தும் ஒன்றாய்
உன்மகன் நாமத் தோர்ஆ றெழுத்தென உற்ற அன்றே.
—உற்பத்திகாண்டம்; திருவிளையாட்டுப்படலம், பா.18

இந்த ஆறெழுத்து மந்திரத்தைத்தான் வள்ளி, தெய்வயானை ஆகிய எம்பிராட்டியார் இருவரும் பூர்வத்தில் செபித்தார்கள் என்று வடமொழிக் கந்தபுராணம் சம்பவ காண்டத்து 36-ஆம் அந்தியாயத்து 33-ஆம் சுலோகத்தில் கூறுவதைப் பாம்பன் சுவாமிகள் நமக்கு எடுத்துக்காட்டுகிறார் (சுப். வியா. 28)

6 எழுத்து மந்திரம் — சரவணபவ
7 எழுத்து மந்திரம் — ஓம் சரவணபவ
8 எழுத்து மந்திரம் — ஓம் ஹ்ரீம் சரவணபவ
9 எழுத்து மந்திரம் — ஓம் ஹ்ரீம் ஸ்ரீம் சரவணபவ
10 எழுத்து மந்திரம் — ஓம் ஹ்ரீம் ஸ்ரீம் ஐம் சரவணபவ
11 எழுத்து மந்திரம் — ஓம் ஹ்ரீம் ஸ்ரீம் ஐம் க்லீம் சரவணபவ
12 எழுத்து மந்திரம் — ஓம் ஹ்ரீம் ஸ்ரீம் ஐம் க்லீம் ஸௌ சரவணபவ.

(இப்பீஜங்கள் தரும் பயன்கள் முன்னர் பா. 42-இல் காட்டப்பெற்றன).

## 12. சிவலிங்க வணக்கம்

34. நெடிய விசும்பொடு கண்ணே போற்றி
நீள அகலம் உடையாய் போற்றி
அடியும் முடியும் இகலிப் போற்றி
அங்கொன் றறியாமை நின்றாய் போற்றி
கொடிய வெங்கூற்றம் உதைத்தாய் போற்றி
கோயிலா என்சிந்தை கொண்டாய் போற்றி
கடிய உருமொடு மின்னே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி —6.55.10

குறிப்பு : விசும்பு; இங்குப் பரமாகாயம்; பரமவியோமம்; கண்-ஞானம். விசும்பொடுகண்-ஞபன சத்தியின் ஆற்றல் நிறைந்துள்ள பரமாகாயம்; ஞானவெளி. சிவாலயத்தின் கருவறையிலிருந்து வீசும் ஞானக் கதிர்கள் சிவாலயத்தில் உள்ள பிராகாரங்கள் மண்டபங்கள் ஆகியவற்றில் எங்கும் நிறைந்து நிற்பன. கருவறையில் எழுந்தருளிய சிவலிங்கத் திருமேனியில் இலிங்கப் பகுதி ஞானசக்தி; ஆவுடையார் அல்லது பீடம் கிரியசத்தி;

(சித்தாந்த சாராவளி, கிரியா பாதம், சுலோகம், 21) ஞானசத்தி ஒளிமயமாய் நாத தத்துவமாய் எங்கும் நிறைந்து நிற்பது. கிரியா சத்தி பல்வேறு மண்டலங்களையும் உலகுகளையும் விந்து தத்துவத்திலிருந்து படைத்து அவற்றோடு ஒன்றாய்க் கலந்து நிற்பது, நெடிய விசும்போடு கண்ணே-நாதம்; ஞானசத்தி; இலிங்கப்பகுதி. நீள அகலம் உடையாய்-விந்து; கிரியா சத்தி; பீடம் (ஆவுடையார்). அயனும் மாலும் இகலிப் (தம்முள் மாறுபட்டுப்) போரிட்டபோது முடியும் அடியும் தேடும்படி சிவபெருமான் ஓர் மாபெரும் அழல் தூணாய் நின்றதுவே சிவலிங்க தோற்றத்தின் வரலாறு. இம்மூர்த்தி லிங்கோத்பவர் எனப் பெயர் பெறுவர். இம்மூர்த்தியைப் பல கோயில்களில் கருவறைக்குப் பின்னே உள்ள சுவரில், கருவறையை அடுத்து உள்ள பிராகாரத்தில் காணலாம். உரும்-இடி, ஒலி, நாதம்; மின்-மின்ஒளி, விந்து. 'உரும்' என்றது சிவலிங்கத் திருமேனியில் இலிங்கப் பகுதினையும், 'மின்' என்றது ஆவுடையாரையும் உணர்த்தி நிற்பன, ''நாதம் இலிங்கமாகவும், விந்து சத்தியாகவும் (பீடமாகவும்) விளங்கும்'' என்று கூறும் வாதுளாகமம். ''சிவன் நாதரூப லிங்கமாகவும், சத்தி விந்துரூப பீடமாகவும் கூடி இருந்து எல்லா உலகுகளையும் படைப்பர்'' என்பர் சிவாக்கிரர். (சித்தி. சூத். 1. பா. 69 உரை)

நாதம், விந்து-தூலத் திருமேனி; ஞானசத்தி, கிரியாசத்தி—சூக்குமத் திருமேனி.

சிவலிங்கத் திருமேனியை நாம் வழிபடும்போது இலிங்கப் பகுதியில் நாதம், அதனைத் தொழிற்படுத்தும் ஞானசக்தி, அந்த ஞான சத்தியை விட்டுப் பிரியாத சிவம் ஆகிய மூன்றையும், ஆவுடையாரில் விந்துவையும் அதனைத் தொழிற்படுத்தும் கிரியா சத்தியையும் நினைந்து வழிபடுதல் வேண்டும்.

35. பாட்டுக்கும் ஆட்டுக்கும் பண்பா போற்றி
பல்ஊழி யாய படைத்தாய் போற்றி
ஊட்டகத்தே ஊணா உகந்தாய் போற்றி
உள்குவார் உள்ளத் துறைவாய் போற்றி
காட்டகத்தே ஆடல் மகிழ்ந்தாய் போற்றி
கார்மேகம் அன்ன மிடற்றாய் போற்றி
ஆட்டுவதோர் நாகம் அசைத்தாய் போற்றி
அலைகெடில வீரட்டத் தாள்வாய் போற்றி —6.5.2.

குறிப்பு: பல்ஊழி ஆய படைந்தல்—பல பிரளயங்களை உண்டாக்குதல்; உலகுகளை ஒடுக்குதல்; சர்வ சம்ஹாரம். ாகம்-குண்டலினியாகிற பாம்பு; சுத்தமாயை. நாகம் அசைத்தல்

சுத்தமாயையைத் தொழிற்பறித்தி அதனின்றும் பல அண்டங்களையும் மீண்டும் தோற்றுவித்தல்; புனர் உற்பவம். 'லிங்கம்' என்ற வேற்று மொழிச் சொல் 'லிங்', 'கம்' என்ற இரு வேர்ச்சொற்களைக் கொண்டது. 'லங்'-லயம்; ஒடுக்கம்; 'கம்'-தோற்றம். லிங்கம்-உலகுகளது ஒடுக்கத்திற்கும் தோற்றத்திற்கும் நிமித்த காரணமாக இருக்கும் சிவபெருமானை உணர்த்தி நிற்பது. (துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள், சித்தாந்த சிகாமணி, இலிங்க தாரணத்தலம், பா. 11)

36. வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி
மீளாமே ஆள்என்னைக் கொண்டாய் போற்றி
ஊற்றாகி உள்ளே ஒளித்தாய் போற்றி
ஓவாத சத்தத்து ஒலியே போற்றி
ஆற்றாகி அங்கெ அமர்ந்தாய் போற்றி
ஆறங்கம் நால்வேதம் ஆனாய் போற்றி
காற்றாகி எங்கும் கலந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி —6, 55, 1

குறிப்பு : விண்ணாகி நிற்றல்-விண் மண்டலமாகிய சாந்தியதீத கலாசக்கரத்து அதிதெய்வமாகிய சதாசிவனாய் இலிங்கத்தில் விளங்கி நிற்றல். காற்றாகி எங்கும் கலத்தல்-காற்று மண்டலமாகிய சாந்திகலா சக்கரத்து அதிதெய்வமாகிய மகேசனாய் இலிங்கத்தில் விளங்கி நிற்றல்.

வேற்றாகி நிற்றல்-ஏனைய அனல் மண்டலம் (வித்தியாகலா சக்கரம்), நீர் மண்டலம் (பிரதிட்டா கலா சக்கரம்), மண் மண்டலம் (நிவிர்த்தி கலா சக்கரம்) ஆகிய மண்டலங்களின் அதிபதிகளாகிய உருத்திரன், மால், அயன் ஆகிய அதிதெய்வங்களாய் முறையே இம்மண்டலங்களைக் காரியப்படுத்தி நிற்றல். கருவறையில் எழுந்தருளியிருக்கும் சிவலிங்கம் சிவபிரானது திருமேனி; ஐந்து மண்டலங்களும் அவரது தூலத் திருமேனி (பரு உடம்பு); இம்மண்டலங்களைக் காரியப்படுத்தும் சதாசிவன், மகேசுவரன், உருத்திரன், மால், அயன் ஆகிய ஐந்து அதிதெய்வங்களும் அவரது சூக்குமத் திருமேனி (நுண் உடம்பு).

சாந்தியதீத விண் மண்டலத்தையும் அதன் அதிபதியாகிய சதாசிவரையும் சிவலிங்கத் திருமேனியில் மேலே உள்ள இலிங்கப் பகுதியில் நினைந்து வழிபடவேண்டும். ஏனைய மண்டல அதிபதிகளாகிய மகேசன், உருத்திரன், மால், அயன் ஆகிய நால்வரையும் நாம் பீடத்தில் வழிபடவேண்டும்.

ஆற்று-ஆற்றல், கிரியாசத்தி, பீடம்; ஆறங்க நால்வேதம்-ஞானம்; ஞானசத்தி, இலிங்கப்பகுதி.

37. உடலின் வினைகள் அறுப்பாய் போற்றி
ஒள்ளரி வீசும் பிரானே போற்றி
படரும் சடைமேல் மதியாய் போற்றி
பல்கணக் கூத்தப் பிரானே போற்றி
சுடரில் திகழ்கின்ற சோதீ போற்றி
தோன்றிஎன் உள்ளத் திருந்தாய் போற்றி
கடலில் ஒளியாய முத்தே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி 6, 56, 5

குறிப்பு: எரிவீசுவது-ஞானசக்தி; சடை-ஆதிசத்தி; அதில் கிடக்கும் மதி-ஞானசத்தி இலிங்கப் பகுதி.

சுடர்-ஞானசத்தி; அதில் திகழ்கின்ற சோதி-பரஞ்சோதி, சிவம். 'லிங்கம்' என்ற சொல்லுக்கும் பிரகாசம் என்ற பொருளும் உண்டு. ''இந்தச் சுந்தரச் சுயம்புலிங்கம் சுயம்பிரகாசமாகும்'' என்பர் பரஞ்சோதி முனிவர். (திருவிளையாடற்புராணம், வேதத்துக்குப் பொருள் அருளிச் செய்த படலம், 28) 'ஒளி எரிவீசும்பிரான்', 'படரும் சடைமேல் மதி', 'சுடரில் திகழ்கின்ற சோதி' ஆகிய மூன்றும் 'லிங்கம்' என்ற சொல்லின் பொருளை உணர்த்தி நிற்பன. எனவே சிவலிங்கத்தில் ஞானமே திருமேனியாக உடைய சிவபெருமானை நாம் நினைந்து வணங்க வேண்டும் என்பதனை அப்பர் சுவாமிகள் இத்திருத்தாண்டகத்தில் நமக்கு உணர்த்துகிறார்.

38. பொறையுடைய பூமிநீர் ஆனாய் போற்றி
பூதப்படை ஆள் புனிதா போற்றி
நிறையுடைய நெஞ்சின் இடையாய் போற்றி
நீங்கா தென்உள்ளத்(து) இருந்தாய் போற்றி
மறையுடைய வேதம் விரித்தாய் போற்றி
வானோர் வணங்கப் படுவாய் போற்றி
கறையுடைய கண்டம் உடையாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி —6.56.1

குறிப்பு: *(1)* பொறை-பொறுத்தல், தாங்குதல். பூமி-மண் அண்டம், பிரதிட்டா கலாசக்கரம், நீர்-அப்பு அண்டம். இவை கூறப்பட்டதால் ஏனைய அனல், காற்று, விண் அண்டங்களும் (மண்டலங்களும்) உடன் கொள்ளப்பெறும். இவற்றுள் ஒன்றாகக் கலந்து நின்று இவற்றை இறைவன் இயக்குதால் இவை

இறைவனது தூலத் திருமேனி ஆகின்றன. இவ்வண்டங்களைக் கொண்ட திருமேனி அண்டலிங்கம்.

(ii) நெஞ்சு-மனதத்துவம் உடம்பைக் குறித்து நின்றது. நெஞ்சிடையாய்-என் உடம்புகளில் உள்ள 36 தத்துவங்களிலும் ஒன்றாகக் கலந்து நின்று அவற்றை இயக்குபவனே! இது பிண்டலிங்கம். இதுவும் இறைவனது தூலத் திருமேனியாம்.

(iii) மறையுடைய வேதம் விரித்தாய்-மறைந்து சொல்லப் படும் உண்மைகளைத் தன்னுட் கொண்ட வேதம், அந்த, வேதத் தின் உட்பொருள்களை உணர்த்தும் ஆகமங்கள் ஆகியவற்றைத் தோற்றுவித்தவனே! வேதாகமங்களைத் தோற்றுவிப்பவர் சதாசிவமூர்த்தி. இம்மூர்த்தியைச் சிவலிங்கத்தில் நாம் வழிபடும் போது அது சதாசிவலிங்கம் ஆகிறது. பூதப்படையான் புனிதன்: படை-கூட்டம்; கணம். பூதகணங்களை ஆள்பவர் சதாசிவர். இதுவும் சதாசிவ லிங்கத்தை உணர்த்தி நின்றது.

(iv) நீங்காது என் உள்ளத்து இருந்தாய் :— உள்ளம்-இங்கு உயிரை உணர்த்துவது. சுத்தான்மாக்களை உணர்த்துவது. சுத்தான்மாக்களினுள் நிறைந்து நிற்பவன் இறைவன். இது ஆன்ம லிங்கத்தை உணர்த்தி நின்றது.

(v) இறைவன் தூய உயிரோடு நிறைந்து நிற்கும்போது உயிர் வியாபக அறிவு பெற்று நிற்கும். உயிருக்கு இவ்வாறு வியாபக அறிவைத் தருவது ஞானலிங்கம்.

(vi) வியாபக அறிவு பெற்ற தூய உயிரோடு இறைவன் இரண்டறக் கலந்து நிற்கும்போது, உயிர் சிவனது பேரானந்தத்தில் அழுந்தி நிற்கும். இப்பேரானந்தத்தை உயிர்களுக்கு அருளுவது சிவலிங்கம். இவ்விலிங்கத்தில் இலிங்கப் பகுதி சிவம்; பீடம் சத்தி. இவ்விருவரும் சேர்ந்து தூய உயிர்களுக்குப் பேரானந்தப் பெரு வாழ்வைத் தருவது சிவலிங்கம். எனவே 'நீங்காது என் உள்ளத்து இருந்தாய்' என்ற அருள்வாக்கு 'எனது உயிரினுள் ஒன்றாய்க் கலந்து நின்று வியாபக அறிவையும், உடனாய் நின்று ஆனந்த அனுபவத்தையும் தருபவன் நீ' என்று ஆன்மலிங்கம், ஞானலிங்கம், சிவலிங்கம் ஆகிய மூவகை இலிங்கங்களையும் மனத்தில் நினைந்து, சிவத்தினது பெருங்கருணையைப் போற்றியதாகும்.

அண்ட லிங்கம், பிண்ட லிங்கம், சதாசிவ லிங்கம், ஆன்ம லிங்கம், ஞான லிங்கம், சிவலிங்கம் ஆகிய ஆறுவகை இலிங்கங்கள் பற்றித் திருமூலதேவர் தமக்கு உணர்த்துகிறார். (திருமந்திரம்,

7-ஆம் தந்திரம், பா. 1712-1777). இவற்றின் விரிவெல்லாம் ஆங்கு காண்க,

சிவாலயத்துள்ள கருவறையில் எழுந்தருளியுள்ள சிவபெருமான் இந்த அறுவகைத் திருமேனிகளையும் சிவலிங்க வடிவிற் கொண்டு நமக்கு அருள் பாலித்து வரும் பெருங் கருணையை நினைந்து நாம் சிவலிங்கத்தில் சிவபெருமானை வழிபடவேண்டும்.

39. செய்யாய் கரியாய் வெளியாய் போற்றி
செல்லாத செல்வம் உடையாய் போற்றி
ஐயாய் பெரியாய் சிறியாய் போற்றி
ஆகாய வண்ணம் உடையாய் போற்றி
வெய்யாய் தணியாய் அணியாய் போற்றி
வேளாத வேள்வி உடையாய் போற்றி
கையார் தழலார் விடங்கா போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. —6, 57, 4.

இத்திருத்தாண்டகம் பஞ்சபிரம மந்திரங்களைத் தன்னுட் கொண்டு திகழ்வது.

(i) ஆகாய வண்ணம் உடையாய் போற்றி—"ஓம் ஹோம் ஈசானாய நம:" என்ற மந்திரம். ஆகாயம்-விண் மண்டலம்; அதனைத் தொழில்படுத்துபவர் ஈசானர் ஆகிய சதாசிவமூர்த்தி.

(ii) செய்யாய் போற்றி—"ஓம் ஹெம் தத்புருஷாய நம:"? என்ற மந்திரம். செந்நிறம் உடையவர் மகேசுவரர்; உயிர்களுக்குள் உயிராய் நின்று உயிர்களைச் செலுத்துபவர் மகேசுவரர்; தற்புருஷமூர்த்தி.

(iv) கரியாய் போற்றி—"ஓம் ஹூம் அகோராய நம:" என்ற மந்திரம். கரிய நிறம் உடையவர் அகோரமூர்த்தி. இவர் உருத்திர மூர்த்தி.

வெய்யாய் போற்றி—இதுவும் ஓம் ஹூம் அகோர ஹ்ருதயாய நம: என்ற மந்திரம். வெய்யாய்-அக்னி மண்டலத்தில் ஒன்றாய் இருந்து அதனைத் தொழிற்படுத்தும் உருத்திரரை உணர்த்தியது.

(iv) தணியாய் போற்றி—"ஓம் ஹிம் வாமதேவாய நம:" என்ற மந்திரம். நீர் மண்டத்துக்கு அதிபதியாகிய திருமால் வாமதேவர்.

(v) வெளியாய் போற்றி—"ஓம் ஹம் சத்யோஜாதாய நம:" என்ற மந்திரம். சத்தியோஜாதாய மூர்த்தியின் நிறம் வெண்மை; இது பிரமனைக் குறித்து நின்றது.

ஈசானம், தத்புருஷம், அகோரம், வாமதேவம், சத்யோஜாதம் ஆகிய ஐந்தும் சிவபெருமானது சத்திகள்; முறையே அருளல், மறைத்தல், ஒடுக்குதல் (அழித்தல்), காத்தல், படைத்தல் ஆகிய ஐந்து தொழில்களையும் செய்யும் சக்திகள். இவை ஐந்தும் சிவபெருமானுக்குத் திருமேனியாய் நிற்பன'

இந்த ஐந்து மந்திரங்களும் பஞ்சப்பிரம மந்திரங்கள் என்று சொல்லப்பெறுவன. இந்தப் பஞ்சப்பிரம மந்திரங்களைத் திருமேனியாக உடையவர் சதாசிவமூர்த்தி; சிவலிங்கப்பெருமான். இவை போக சிவத்திற்கு ஐந்து முகங்களாகவும் நிற்பன, (பௌஷ்கர டீகா, சுலோ. 55)

இறைவனுக்கு லயம், போகம், அதிகாரம் என்ற மூன்று நிலைகள் உண்டு. லயம் - அருவம்; போகம் - அருவுருவம்; அதிகாரம்-உருவம். இறைவனது அருவுருவ நிலையை உணர்த்துவது சிவலிங்கம்.

சிவலிங்கப்பெருமானை நாம் வழிபடும்போது பஞ்சப்பிரம மந்திரங்களைச் சொல்லி வழிபடவேண்டும். சிவலிங்கத்தின் அருவம், அருவுருவம், உருவம் ஆகிய மூவகைத் திருமேனிகளைக் கொண்ட சதாசிவராக நினைந்து வழிபடவேண்டும். இதற்கு இத் திருத்தாண்டகம் துணை செய்வதாக உள்ளது.

40. போற்றி இப்புவனம் நீர்தீக் காலொடு வானம் ஆனாய்
போற்றி எவ்வுயிர்க்கும் தோற்றம் ஆகிந் தோற்றம் இல்லாய்
போற்றி எல்லா உயிர்க்கும் ஈறாய் ஈறின்மை ஆனாய்
போற்றி ஐம்புலன்கள் நின்னைப் புணர்கிவாப்
புணர்க்கையானே.

—8. 74, திருவாசகம், திருச்சதகம், 70.

(i) புவனம் ஆனாய்—(மண் மண்டலாதிபதியாகிய பிரமனாய் உள்ளாய்) ஓம் ஹம் சத்யோஜாத மூர்த்தியே நம : என்ற மந்திரம்.

(ii) நீர் ஆனாய்—(நீர் மண்டலாதிபதியாகிய திருமாலாய் உள்ளாய்) ஓம் ஹிம் வாமதேவ குஹ்யாய நம : என்ற மந்திரம்.

(iii) தீ ஆனாய்—(அனல் மண்டல உருத்திரன் ஆனாய்) ஓம் ஹூம் அகோர ஹ்ருதயாய நம : என்ற மந்திரம்.

(iv) கால் ஆனாய்—(காற்றுமண்டல மகேசுரனாக நின்றாய்) ஓம் ஹெம் தத்புருஷ வக்த்ராய நம : என்ற மந்திரம்.

(v) வானம் ஆனாய் — (விண்மண்டல சதாசிவனாக உள்ளாய்) ஓம் ஹொம் ஈசான மூர்த்தயே நம : என்ற மந்திரம்,

சத்யோசாதம் முதலாகத் துதிப்பது—ஒடுக்கமுறை; (லிங்)
ஈசானம் முதலாகத் துதிப்பது—தோற்றமுறை; (கம்)

''புவனம் நீர்தீக் காலொடு வானம் ஆன்ற ஐம்பூதம் ஒடுக்க முறையில் ஓதியது. (லிங்)

41. அஞ்சு முகமுள ஐம்மூன்று கண்உள
அஞ்சினோ டஞ்சு கரதலம் தான்உள
அஞ்சுடன் அஞ்சா யுதமுள நம்பிஎன்
நெஞ்சு புகுந்து நிறைந்து நின்றானே. —10, 1736

42. சத்திதான் நிற்கின்ற ஐம்முகம் சாற்றிடில்
உத்தரம் வாமம்; உரைத்திடும் சத்தி
பச்சிமம்; பூருவம் தற்புருடன்; உரை
தெற்கில் அகோரம்: வடகிழக்(கு) ஈசனே. —10, 1741

சத்தி (இரண்டாம் அடி)—சத்யோஜாத முகம்; பச்சிமம்-மேற்கு; பூருவம்-கிழக்கு.

43. ''தாணு நல் ஈசானம் நடுஉச்சி தானாகும்;
தாணுவின் தன்முகம் தற்புருட மாகும்;
காணும் அகோரம் இருதயம்; குய்யமாம்
மாணுற வாகமம்; ஆம்சத்தி நற்பாதமே''

என்பது திருமூலதேவர் திருவாக்கு. (திருமந்திரம், பா. 1742, ஏழாவது தந்திரம், சதரசிவ லிங்கம், பா. 13).

தரணு-சிவலிங்கம், சதாசிவமூர்த்தி; சத்தி-சத்தியோசாதம்.

குறிப்பு : (41—42) பாடல் 42 சதாசிவமூர்த்தியின் ஈசானம் முதலிய ஐந்து திருமுகங்களும்நோக்கி நிற்கும் திசைகளைக் கூறுவன. அவை—ஈசானம்-நடுவு (வடகிழக்கு); தற்புருடம்-கிழக்கு; அகோரம்-தெற்கு; வாமதேவம்-வடக்கு; சத்தியோஜாதம்-மேற்கு.

சிவலிங்கத்தில் சதாசிவ மூர்த்தியைத் தியானிக்கும்போது இந்த 5 திக்குகளிலும் 5 முகங்களைக்' கொண்டவராகவும், 15 கண்களை உடையவராகவும், 10 திருக்கரங்களில் 10 ஆயுதங்களை ஏந்தியவ ராகவும் தியானிக்கவேண்டும். இந்த இரு திருமந்திரப் பாசுரங் கள் சதாசிவ மூர்த்திக்குரிய தியான சுலோகங்களாக அமைவன.

44. தன்மேனி தற்சிவ லிங்கமாய் நின்றிடும்
தன்மேனி தானும் சதாசிவ மாய் நிற்கும்
தன்மேனி தற்சிவன் தற்சிவா னந்தமாய்
தன்மேனி தானாகும் தற்பரம் தானே. —10.1750

சிவலிங்கம் சிவன் தன் திருமேனி. அத்திருமேனியில் சத்தியும் சிவமும் ஆய சதாசிவமூர்த்தி எழுந்தருளி உயிர்களுக்கு அருள் பாலித்து நிற்பர். இச் சிவலிங்கத் திருமேனியில் உள்ள சிவத்தோடு உயிர் இரண்டறக் கலந்து நிற்கும் போதே அது சிவானந்தத்தை அனுபவிப்பதாம்; சிவனது பேரின்பத்தை நுகர்வதாம்.

தற்பரம்-பரமசிவம்; சதாசிவமூர்த்தியினுள் நின்று அருள் பாலிப்பவர். சதாசிவம்-பரமசிவமூர்த்தி; பரமசிவத்தின் திருமேனி; பரமசிவம் - மூர்த்திமான்; சதாசிவத்தினுள் (அந்தர்யாமியாக) எழுந்தருளி நின்று எல்லா உயிர்களுக்கும் சிவானந்த அனுபவத்தை அருள்பவர்.

சிவலிங்கத்தை வழிபடும்போது, அது சிவனது திருமேனி எனவும், அத்திருமேனி சதாசிவமூர்த்தி எனவும், அச் சதாசிவ மூர்த்தி வாயிலாகச் சிவபெருமான் நமக்குப் பேரானந்தத்தை அருள்பவர் எனவும் நினைந்து வழிபடுதற்கு இத்திருமந்திரப் பாடல் மிகவும் துணை செய்யும்.

45. உலகெலாம் உணர்ந்(து) ஓதற்கரியவன்
நிலவுலாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம். —12, 1.

—பெரிய புராணம், பாயிரம்-1

(அ) (i) உலகு-பலவேறு உலகுகள்; அண்ட லிங்கம்.

(ii) உணரும் உலகு-பலவேறு உலகுகளில் உள்ள உயிர்கள்-பிண்ட லிங்கம்.

(iii) அம்பலத்தாடுவான்-ஐந்தொழிற் கூத்து ஆடுபவன், சதாசிவ லிங்கம்.

(iv) வணங்குவது-நகார, மகாரச் சார்புகளை விட்டு நீங்கி சிகார வகாரங்களைச் சார்ந்து நிற்கும் சுத்தான்மா, ஆன்ம லிங்கம்.

(v) அலகில் சோதியன்—ஞானமே வடிவானவன், ஞான லிங்கம்.

(vi) மலர் சிலம்பு அடி—சிவானந்தானுபூதியே இறைவன் திருவடி. சிவானந்தத்தை உயிர்களுக்கு அருள்பவன். (உயிர்களைப் பேரின்பத்தில் அழுந்தும்படி செய்பவன்) சத்தியோடு கூடிய சிவம் சிவலிங்கம்.

(ஆ) (i) அம்பலத்தரடுதல்—ஐந்தொழிற் கூத்து ஆடுதல்-இதனைச் செய்வது கிரியா சத்தி.

(ii) நிலவு-இறைவன் சடையில் உள்ள மதி—ஞான சத்தி.

(iii) நீர்-இறைவன் சடையில் உள்ள கங்கை—இச்சா சத்தி.

(iv) வேணி-சடை, ஆதி சத்தி (திரோதான சத்தி)

(v) அடி-சிவானந்தானுபூதியாகிற திருவடி-உயிர்களுக்குப் பேரானந்தத்தை அருளும் பராசக்தி.

கிரியாசத்தி முதலிய ஐந்து சத்திகளின் பலவேறு கூறுகளே முறையே சத்யோசாதம், வாமதேவம், அகோரம், தற்புருடம், ஈசானம் முதலிய சதாசிவமூர்த்தியின் திருமுகங்களாய்த் திகழ்வன

(இ) (i) உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவன்-வாக்குமனாதீதன்; மனவாசகம் கடந்தவன்; இது இறைவனது சொரூப நிலை. அவனது அருவநிலை; லய நிலை;

(ii) அலகில் சோதியன்-அருவுருவ நிலை; போக நிலை.

(iii) அம்பலத்தாடுவன்-உருவநிலை; அதிகார நிலை.

இந்த மூன்று நிலைகளையும் உணர்த்தி நிற்பது சிவலிங்கத் திருமேனி.

(ஈ) (i) ''உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவன்'' இறைவனது சொரூப நிலை, 'சி' (பேசா எழுத்து)

(ii) அம்பலம்-பரஞான வெளி-சத்தி 'வ'; ஆடுவான்-சிவன் 'சி' அம்பலத்து ஆடுவான்-'வசி' என்ற மகாகாரண பஞ்சாக்கரம்.

(iii) மலர் சிவம்படி-திருவருள், சித்தி, 'வ'.

வணங்குதல்-தனது செயலற்று நிற்றல்; 'ந'கார மகாரங்களது சார்பு நீங்கி சிகார வகாரங்களைப் பற்றி நிற்றல்.

இவ்வாறு வணங்குவது சுத்தான்மா-'ய'.

''ஆடுவான் மலர்சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்''—'சிவாய' என்ற காரண பஞ்சாக்கரம்.

இப்பாடல் சுத்த பஞ்சாக்கரங்கள் மூன்றினையும் உணர்த்துவதும் காணப்பெறும்.

இவைபோன்று பல அரிய சித்தாந்தக் கருத்துக்களைக் கொண்டது அம்பலவாணர் அடியெடுத்துக் கொடுக்கப் பாடிய இந்த அருட்பாடல்.

## 13. நடராஜர் வணக்கம்

46. வானம்இது எல்லாம் உடையான் தன்னை
வரிஅரவக் கச்சானை வன்பேய் சூழக்
கானமதில் நடமாட வல்லான் தன்னைக்
கடைக்கண்ணால் மங்கையையும் நோக்கா என்மேல்
ஊனம்அது எல்லாம் ஒழித்தான் தன்னை
உணர்வாகி அடியேனதுள்ளே நின்ற
தேனமுதைத் தென்கூடல் திருஆலவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே. —6, 19, 4
—திருவாலவாய்த் திருத்தாண்டகம்-4.

(அ) வானம்-விண் மண்டலம்; சாந்தியதீத கலா சக்கரம். இது எல்லாம்-கால், அனல், நீர், மண் ஆகிய மண்டலங்கள்; சாந்தி, வித்தை, பிரதிட்டை, நிவிர்த்தி ஆகிய கலா சக்கரங்கள் எல்லாம். உடையான்-சதாசிவன், மகேசன், உருத்திரன், திருமால், அயன் ஆகியோராக நின்று இம் மண்டலங்களைத் தொழிற்படுத்துபவன்; இந்த ஐவரும் ஐந்தொழிற்களைச் செய்பவர்களாதலின் தாண்டவ மூர்த்தியாக இருந்து பஞ்ச கிருத்திய நடனத்தைச் செய்பவன்.

(ஆ) (i) அரவம்-குண்டலினி. அதனைக் கச்சாகக் கட்டுதல்-குண்டலினியை ஒடுக்குமாறு செய்தல். இது சர்வ சங்கார தாண்டவத்தை உணர்த்தியது.

(ii) கானமதில் நடமாடல்-இது சங்காரத்துக்குப்பின் மீண்டும் படைக்கும் சிருஷ்டி. தாண்டவத்தைக் குறித்தது.

(iii) மங்கை-சிவகாமியம்மை. மங்கையை நோக்குதல்-சர்வ சங்கார காலத்தில் தன்னுள் அடங்கி இருந்த சத்தியை வெளிப் படுத்தி உயிர்களைப் பரசங்களினின்றும் விலக்கிக் காக்கச் சங்கற்பம் செய்தல். இது இறைவனது திதி தாண்டவத்தை உணர்த்துவது.

(iv) ஊனம்-தீமை; இங்குக் கொடிய ஆணவமலத்தை உணர்த்துவது. இது திரோதான (மறைத்தல்) தாண்டவத்தைக் குறிப்பால் உணர்த்தியது.

(v) தேன்-அமுது-சிவானந்தானுபூதி பேரின்ப அனுபவம். இதனைத் தரும் அனுக்கிரக (அருளல்) தாண்டவத்தை உணர்த்தியது.

(இ) சிவன்;'சி'; அடி-திருவருள்; சத்தி; சிந்தித்தது-'ய'. இது 'சிவாய' என்ற காரண பஞ்சாக்கரம்.

(ஈ) ஊனம் எல்லாம் ஒழித்தல்—பாச நீக்கம்;
உள்ளே தேனமுதாய் நிற்றல்—சிவப்பேறு

இந்த இரண்டையும் உயிர்களுக்கு அருள்வது நடராஜப் பெருமான் கூத்து. முன்னது ஊன நடனம்; பின்னது ஞான நடனம்; ஆனந்தக்கூத்து.

47. பிச்சாடல் பேயோ(டு) உகந்தாய் போற்றி
பிறவி அறுக்கும் பிரானே போற்றி
வைச்சாடல் நன்று மகிழ்ந்தாய் போற்றி
மருவிஎன் சிந்தை புகுந்தாய் போற்றி
பொய்ச்சார் புரம்மூன்றும் எய்தாய் போறறி
போகாமெதன் சிந்தை புகுந்தாய் போற்றி
கச்சாக நாகம் அசைத்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி —6, 55, 2
—திருத்தாண்டகம், திருக்கயிலாயம் பதிகம் 1. பா.2

பிச்சு-பித்து. இது பேரானந்தத்தால் வருவது; பிச்சாடல்-ஆனந்தத் தாண்டவம்; பேய்-சீவன்முத்தர், சுத்தான்மாக்கள்; பேயோடு ஆடுதல்-சீவன்முத்தர், சுத்தான்மாக்கள் ஆகியோருடன் அத்துவிதமாகக் கலந்து நின்று, அவர்களோடு ஆனந்தக்கூத்து ஆடி, அவர்களைப் பேரானந்தத்தில் அழுத்துதல், பிறவி அறுத்தல்-ஐந்தொழிற்கூத்து ஆடி உயிர்களது மும்மலங்களையும் போக்குதல். வைச்சு-தூக்கிய திருவடிக்கீழ் உயிரை அமருமாறு செய்து; ஆடல் மகிழ்தல்-உயிர் தனது ஆனந்ததமுந்தச் செய்தல். இப்பெரும் பேற்றைக் காரைக்காலம்மையார் பெற்ற வரலாறும் காண்க. சிந்தை-உயிர்; புரம் மூன்றும் எய்தல்-மும்மல நீக்கம்; நாகம் கச்சாக அசைத்தல்-சுத்த மாயையைக் (குண்டலினியைச்) சர்வ சங்கார காலத்தில் தன்னுள் ஒடுக்குதல்.

| | |
|---|---|
| பிச்சாடல் பேயொடு உகத்தல்<br>வைச்சாடல் நன்று மகிழ்தல்<br>மருவிஎன் சிந்தை புகுதல்,<br>போகாதென் சிந்தை புகுதல் | } ஞான நடனம் |
| பிறவி அறுத்தல்<br>புரமூன்றும் எய்தல்<br>கச்சாக நாம் அசைத்தல் | } ஊனநடனம் |

48. மதிக்குத் திறல் உடைய வல்லரக்கன் தோள் நெரிய
மிதிக்கும் திருவடி என் தலை மேல் வீற்றிருப்ப
கதிக்கும் பசுபாசம் ஒன்றும் இலோம் எனக்களித்திங்(கு)
அதிர்க்கும் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே.

—8, 565, திருவாசகம், குலாப்பத்து-7

வல்அரக்கன்-வலிய அசுரன்; முயலகன்; வல்லரக்கன் தோள் நெரியமிதிக்கும் திருவடி-முயலகனை அழுத்திஊன்றிய வலதுதிருத் தாள்; முயலகன் உயிர்களதுஆணவமலத்தை உணர்த்தி நிற்பவன். அவனைக் காலால் அழுத்துதல்-ஆணவமலம் மேல் எழாதவாறு அதனை அடக்குதல்; நகார மகாரமல நீக்கம்; உயிர் பாசச் சார்பை விட்டு சிகார வகாரங்களைப் பற்றி நிற்குமாறு செய்தல். இது ஞான நடனம்.

மிதிக்கும் திருவடி என்தலை மேல் வீற்றிருப்ப — அம் முயலகனை மிதித்து அடக்கும் திருவடியின்கீழ் நான் நிற்பே னாகில்; இறைவன் திருவடி நீழலில் நிற்பேனாகில்; அவனது திருவருளில் அடங்கிக் கிடப்பேனாகில்.

கதிக்கும்-எழும்; பசு பாசம் ஒன்றும் இலோம்-பசு ஞானம் (உயிர் அறிவு), பாச ஞானம் (உலகப் பொருள்களைப் பற்றி நின்று அவற்றையே அறியும் அறிவு) ஆகிய இரண்டையும் விட்டு நீங்கி, சிவஞானம் (இறை அறிவு) பெற்று நிற்போம்.

களித்தல் - சிவஞானத்தால் ஆனந்தத் தாண்டவத்தைக் காணலால் வரும் பேரானந்தப் பெருக்கை உணர்த்துவது. அதிர்த்தல்-பேரானந்தக் களிப்பால் வரும் நடுக்கத்தை உணர்த்து வது. குலாத்தில்லை-பிரகாசம் உடைய தில்லை; பரஞானவெளி; பரமவியோமம்; சிதாகாயம்; நுண்ணிய அம்பலம்; சிற்றம்பலம்; இத்தில்லையில் ஐந்தொழில் கூத்து செய்து,'என் பாசக் கட்டுகளை நீக்கி ஆண்டாள் எம்பெருமான். கொண்டன்றே-அவனை ஆண்டானாகவும் என்னை அவனது அடிமையாகவும் கொண்ட அந்நாளிலிருந்தே.

இத்திருவாசகம் தில்லையில் இறைவன் ஆடும் கூத்து உயிர் களது பாசக் கட்டுகளை நீக்கி, பாச, பசு ஞானங்களை நீக்குமாறு செய்து, சிவஞானத்தை நல்கி, உயிர்களை ஆனந்தத்து அழுத் துவது என்பதை உணர்த்துதல் காணப்பெறும். எனவே நடேசப் பெருமாள் உயிர்களுக்குப் பாச நீக்கத்தையும் சிவப் பேற்றையும் அருளும் பெருமான். பாச நீக்கத்தை அருள்வது அவனது ஊன நடனம். சிவப் பேற்றினை அருள்வது அவனது ஞான நடனம்.

ஆண்டான்-சி; தில்லை - பரஞானவெளி. சத்தி - 'வ'. தன்னை அடிமையாகவும் இறைவனை ஆண்டவனாகவும் பெற்றது-'ய'; எனவே ''தில்லை ஆண்டானைக் கொண்டன்றே'' என்ற அருள்வாக்கு 'சிவாய' என்ற காரண பஞ்சாக்கரம்;

49. கணிஎரி, விசிறுகரம், துடி, விடவாய்க்
கங்கணம் செங்கைமற் றபயம்
பிணிகெட இவைகண்(டு) அரன்பெரு நடத்திற்
பிரிவிலார் பெரும்பற்றப் புலியூர்த்
திணிமணி நீல கண்டத்(து) என் அமுதே;
சீர்கொள் சிற்றம்பலக் கூத்த;
அணிமணி முறுவல் பவளவாய்ச் செய்ய
சோதியுள் அடங்கிற்றென் அறிவே. 9, 19
—கோயில், திருமாளிகைத் தேவர் திருவிசைப்பா-8

(அ) கணி-எண்ணத்தக்க, மதிக்கத்தக்க. எரி-தீ, அனல். நடேசப் பெருமான் தமது இடது மேற்கரத்தில் தாங்கி இருக்கும் தீ. இது உயிர்களது கன்ம மலத்தைச் சுட்டு நீக்குவது. விசுறுகரம்-வலப்புறத்தே வீசிய இடத் திருக்கரம்.

துடி விசுறுகரம்-தமருகத்தை (உடுக்கையை) வீசும் கரம்; இது மாயையை உதறி நீக்குவது, விடவாய்க் கங்கணம்-பாம்பாகிய கைவளை. பாம்பு-குண்டலினி; சுத்தமாயை உணர்த்துவது. பாம்பை வளையாகக் கொண்ட கையை விசுறும்போது பாம்பு பயந்து ஒடுங்கி நிற்கிறது. இது மாயாமல நீக்கத்தைஉணர்த்துவது.

செங்கைமற்று அபயம்-அஞ்சேல் என அருளும் செய்யகை. பிணி கெடுதல்-உயிரைப் பிணித்து (பந்தித்து) நின்ற ஆணவமலம் கெடுதல்; ஆணவமலம் வலியின்றிக் கிடத்தல். இது முயலகனை மிதித்து அவன் மேலெழாதவாறு ஊன்றிய திருவடியை உணர்த்தி நின்றது.

(ஆ) இவற்றுள் : அமுது; அம்பலக்கூத்தன்-'சி'. இது துடி விசிறிய கையால் உணர்த்தப்பெறுவது.

வலம்புறம் விசிறும் இடது திருக்கரம்-'வ'

அபய வலக்கரம்-'ய'. எரி ஏந்திய இடக்கரம்-'ந'.

பிணிகெட முயலகனை அழுத்தும் திருவடி-'ம'.

(இ) அணிமுறுவல் பவளவாய்-திருமேனி; சத்தி-'வா'. செய்ய சோதி-'சி', என் அறிவு; இறுதி அடி-சிவாய என்ற காரண பஞ்சாக்கரம்.

(ஈ) திருந்துநற்சீ என்று உதறிய கையும்
அருந்த வாஎன்று அணைத்த மலர்க்கையும்
பொருந்தி அமைப்பில் யவ்வென்ற பொற்கையும்
திருந்த நத்தீயாகும் திருநிலை மவ்வே

என்ற திருமந்திரப் பாடல் (10, 2797, 9-ஆம் தந்திரம், திருக் கூத்துத் தரிசனம், பா. 76) இங்குக் காணத்தக்கது, திருநிலை-முயலகன் மேல் சிவன் நின்றநிலை : 'திரு' என்ற சொல்லுக்கு சிவன் என்ற பொருளும் உண்டு. 'திருவே என் செல்வமே' என்ற அப்பர் அடிகள் அருள்வாக்கு இதனை நமக்கு உணர்த்துவதாக உள்ளது. திருநிலை-சிவனது நிலை; சிவன் முயலகன் மேல் நிற்கும் நிலை; இது மகார நீக்கத்தை உணர்த்தி நிற்பது.

(உ) எனவே ஞான நடனம் செய்யும் நடேசப் பெருமானை நாம் வணங்கும்போது அவரது துடி தாங்கிய கரம் 'சி' காரம் எனவும், வலது புறம் வீசிய (கீழ்) இடது தருக்கரம் நம்மை 'வா' என்று அணைக்கும் இறைவன் திருவருள் (சத்தி-'வா') எனவும், அவரது அபய கரம் 'உனது பாச பசு ஞானங்களை நீக்கி, சிவஞானம் நல்கி, உனக்குப் பேரானந்தத்தை அருள்வோம்; அஞ்சற்க' என்று உணர்த்த, அக்கையில் நாம் (உயிர்-யகாரம்) அதில் அடங்கி அச்சம் அன்றி நிற்பதாகவும், அவர் தம் (மேல்) இடக்கையில் தாங்கிய அனல் நம் கன்ம மலத்தைப் போக்கும் நகாரம் (தரோதன சத்தி) ஆகவும், ஊன்றிய திருத்தாள் நமது மகாரமாகிய ஆணவமலத்தைப் போக்குவதாகவும் நினைந்து வழிபடவேண்டும். இவ்வாறு நடேசப் பெருமான் பஞ்சாக்கரமே தமது திருமேனியாகக் கொண்டவராக நினைந்து பஞ்சாக்கரத்தைப் பலமுறை செபித்து வழிபட வேண்டும்.

இத் திருவிசைப்பா பஞ்சாக்கர நடனத்தை உணர்த்துவது.

(ஊ) நீலகண்டம்-இறைவன் திருமேனியை உணர்த்திநிற்பது-இறைவன் திருமேனி அவனது சத்தியன்றி வேறில்லை. அவன் செய்யும் செயல்கள் எல்லாவற்றையும் தன் சத்தியை கொண்டே செய்வித்தலால், சத்தி (அம்மையார்) அவனுக்கு உடம்பு ஆகிறார் நீலகண்டம்-'வா'; எம்-'ய'; அமுதே- பேரானந்தத்தை அளிக்கும் சிவமே! 'சி'. ''நீலகண்டத்தெம் அமுதே'' என்ற அருள்வாக்கு உயிர் 'வயசி' என அருளுக்கும் சிவத்துக்கும் இடையே நின்று ஆனந்தத் தழுந்தி நிற்கும் நிலையை உணர்த்தி நிற்பது; சிவனது ஆனந்தக் கூத்தை உணர்த்துவதாக உள்ளது. மகேசுவர மூர்த்தங்களில் ஒன்றான சோமாஸ்கந்த மூர்த்தமும் (உமை, கந்தன் ஆகிய இருவருடன் கூடிய வடிவமும்) ஆனந்தத் தழுந்தும் உயிரை

உணர்த்துவது. இங்கு நடுவில் நிற்கும் கந்தன்-ஆனந்தத் தழுந்தி நிற்கும் சுத்தான்மா.

(எ) சிற்றம்பலக்கூத்தர்; சிற்றம்பலம்-பரஞானவெளி; ஞான சத்தி வியாபகம் பெற்ற நுண்ணிய ஆகாயம் 'வா'; கூத்தா-சி. சிற்றம்பலக்கூத்தன் 'வசி' என்ற மகாகாரணபஞ்சரக்கரம்.

(ஏ) செய்ய சோதி-'சி'; ''செய்ய சோதியுள் என் அறிவு அகிங்கிற்று''. யகாரமாகிய உயிர். வகாரமாகிய அருளில் ஒடுங்கி நிற்க, அந்த அருளும் சிகாரத்தில் ஒடுங்கி நின்றது என்றருளியதுமாம். இதுவே 'சி' என்ற பேரெழுத்து உணர்த்தும் மேலான நிலை.

எனவே இத்திருவிசைப்பா 'சிவாய நம', 'வயசி', 'வசி', 'சி' என்ற நான்கு வகைப் பஞ்சாக்கரங்களையும் தன்னுட் கொண்டு திகழ்தல் காணப்பெறும். இவை நான்கும் உயிர்படிமுறையாக மேலே ஏறும் படிகள்; உயிர் நிற்கும் நிலைகள்.

**50.** உம்பரிற் கூத்தனை உத்தமக் கூத்தனைச்
செம்பொற் றிருமன்றுட் சேவகக் கூத்தனைச்
சம்பந்தக் கூத்தனை தற்பரக் கூத்தனை
இன்புற நாடிஎன் அன்பில் வைத்தேனே —10, 2745
—திருமந். 9-ம் தந். திருக்கூத்துத் தரிசனம் பா.21.

நடேசப்பெருமான் பஞ்சாக்கரமே திருமேனியாகக் கொண்டு கூத்து நவிற்றுபவர். 'சிவாய நம' என்ற அஞ்செழுத்து மந்திரத்தில் சி, வ; ய, ந, ம ஆகிய ஒவ்வொன்றும் ஒரு உண்மைப் பொருளை உணர்த்தும் பதம் (சொல்). இந்த ஒவ்வொரு உண்மைப் பொருளிலும் நம்பெருமான் உள்நின்று நடனம் செய்கிறார்.

(அ) தற்பரக்கூத்தன்-மேலான தானே உயிர்கள் உய்யுமாறு நடம் செய்தல்-சிகாரத்தில் நடனத்தை உணர்த்துவது.

(ஆ) உத்தமக்கூத்தன்-மேலான எட்டு அருட்குணங்களின் குணியாக நின்று நடிப்பவன்; அருட்குணங்கள் எட்டு-பக்கம் 35 பாக்க. இந்த அருட்குணங்களே இறைவனது திருமேனி; அவனது சத்தி-வா; இதனுள் இறைவன் கூத்தாடி உயிர்களில் இந்த எட்டு குணங்களும் பதியும்படி செய்கிறான். இது வகாரத்தில் நடனம்.

(இ) சம்பந்தக்கூத்தன்-பாசக் கட்டுவிட உயிர்களோடு (பெத்தான்மாக்களோடு) தொடர்புகொண்டு அவர்களது பாசம் நீங்க ஊன நடனமும், பாசம் நீங்கிய தூய உயிர்களோடு (சுத்தான்

மாக்களோடு) இரண்டற கலந்து நின்று அவர்களை ஆனந்தத்தில் அழுத்த ஞான நடனமும் செய்கிறவன். இது யகாரத்தில் நடனம்.

(ஈ) உம்பரில் கூத்து :—உம்பர் மேல் நிலையில் உள்ள ஐந்து காரணேசுவரர்கள். அயன், மால், உருத்திரன், மகேசுவரர், சதாசிவர் ஆகிய ஐவர். இவர்களுள் நின்று உயிர்களது மும்மலக் கட்டுகளை நீக்குகிறார் தாண்டவேசுவரர், இது திரோதன சத்தியின் தொழிலாதலின் இது நகாரத்தில் நடனம்.

(உ) செம்பொன் திருமன்றில் சேவகக்கூத்தன் : சேவகன்-மலம் நீங்கிய ஆன்மா, மலம்-முயலகனால் உணர்த்தப்பொறுவது; தில்லைப் பொன்னம்பலத்தில் (பேரம்பலத்தில்) ஆணவமே வடிவாக உடைய முயலகன்மீது நின்று ஆடுபவன். இது மகாரத்தல் நடனம்.

இந்த ஐவகைத் திருநடனங்களின் விரிவைத் திருமந்திரத்துட் காணலாம்.

(ஊ) இன்புற-சிவானந்தானுபவம் பெற; பேரின்பம் நுகர. நாடி-தியானித்து, நிட்டை கூடி, ஆனந்தத் தாண்டவப் பெருமானோடு இரண்டறக் கலந்து நின்று.

என் அன்பில் வைத்தேன்-இவ்வாறு நிட்டை கூடி நின்றபோது அவன் சிவானந்தத்தை அடியேனுக்கு அருளிய பெருங்கருணையை நினைந்து நினைந்து, உருக உருக, எனது அன்பும் வளர்ந்தது, அவனும் என்னைவிட்டு என்றும் பிரியாது என்னுடன் கலந்து நின்று, என்னை என்றும் அவனது பேரானந்தத்தில் அழுத்திக் கிடக்குமாறு செய்தான். இது நடேசப் பெருமானது அனவரத ஆனந்தத் தாண்டவத்தை உணர்த்தி நின்றது. (அனவரதம்—எப்போதும்).

51. கற்பனை கடந்த சோதி கருணையே உருவம் ஆகி
அற்புதக்கோல நீடி அருமறைச் சிரத்தின் மேலாம்
சிற்பர வியோமம் ஆகும் திருச்சிற்றம் பலத்துள் நின்று
பொற்புடன் நடம் செய்கின்ற பூங்கழல் போற்றி.-12,1,2

—தில்லைவாழ் அந்தணர் புராணம். பா. 2

(அ) கற்பனை கடந்த சோதி—பாசஞான பசு ஞானங்களால் அறியப்பெறாது அவற்றைக் கடந்து நின்ற ஞானமே வடிவான பரம்பொருள்; சொரூப சிவம். 'சி' கருணை-இறைவனது அருள்; அவனது சத்தி 'வ'; சத்தியே இறைவனது திருமேனி. வியோமம்-ஆகாயம், சிற்பர வியோமம்-மேலான ஞான ஆகாயம், பரஞான வெளி, சிதம்பரம், சிற்றம்பலம். இது சக்தி.

(ஆ) ''ஆகாயம் (சிதம்பர சத்தி) எனப்பட்டவர் நாமரூபங்களைப் படைப்பவர், இவை அனைத்தும் அடங்கி இருக்கப் பெறுவது பரப்பிரஹ்மம், அது சிவம், அது பரமான்மா'' என்று சாந்தோக்கிய உபநிடதம் கூறுகிறது.

''திருச்சிற்றம்பலம் என்ற சொல் இதயத்தில் உள்ள நுண்ணிய ஆகாயத்தையும் குறிக்கும். சிறுமை அம்பலம்-சிற்றம்பலம். சிறுமை-நுண்மை; சிற்றம்பலம்-நுண்ணிய சபை; தாண்டவப் பெருமான் நடிக்கும் நுண்ணிய சபை. இது இதயத்திலும் உள்ளது.

''எது இதயத்துள் ஆகாசமாய் (திருச்சிற்றம்பலமாய்) இருக்கின்றதோ அதில் அனைத்தையும் வசீகரிப்பவரும், அனைத்துக்கும் அதிபதியும், அனைத்துக்கும் ஈசானமும் ஆயினார் அமர்கின்றார்'' என்று பிருகதாரண்ய உபநிடதம் கூறுகிறது. இங்கு ஈசானர் என்றது சதாசிவ மூர்த்தியை; தாண்டேசுவரரை.

''இந்தப் பிரமபுரத்திலே (சரீரத்திலே) தகர (நுண்ணிய) புண்டரீக வீடு உள்ளது, இந்தப் புண்டரீக வீட்டினுள்ளே தகராலயம் (திருச்சிற்றம்பலம்) உள்ளது. இந்தத் தகராலயத்துள்ளே உள்ளது (தாண்டவேசுவரர்) தேடற்பாற்று, அறியற்பாற்று'' என்றும் சாந்தோக்கிய உபநிடதம் கூறுகின்றது.

''எவர் சர்வஞ்ஞரோ, எல்லாம் அறிந்தவரோ, இவ்வுலகில் இந்த மகிமை எவருடையதோ, அவர் (தாண்டவேசுவரர்) பிரமபுரத்திலே (புரம்-சரீரம்) பரமாயாயத்தில் (திருச்சிற்றம்பலத்தில்) இருப்பவர் அன்றோ? அவர் ஞானமயர், பிராணனையும் சரீரத்தையும் செலுத்துபவர், சரீரத்தில் உள்ள இதய சமீபத்தில் இருக்கிறார். அறிஞர்கள் அருள் ஞானத்தினால் ஆனந்த ரூபராய் விளங்கும் சிவபெருமானை அறிகிறார்கள்'' என்று முண்டகோபநிடதமும் கூறுகிறது. (செந்திநாதய்யர், சைவேதாந்தம்)

(இ) கற்பனை கடந்த சோதி—'சி'
கருணை உருவம், திருச்சிற்றம்பலம், கழல்—'வ'
போற்றி போற்றி—போற்றுவது—'ய'

இப்பாடல் 'சிவாய' என்ற காரண பஞ்சாக்கரத்தைத் தன்னுட் கொண்டது. இது உயிரினது தூய அருள்நிலையாகிய சிவயோக நிலையை உணர்த்துவது. இந்த நிலை இதய புண்டரீக வீட்டில் உள்ள நுண்ணிய ஞான வெளியில் எழுந்தருளி இருக்கும் தாண்டவேசுவரைத் தியானித்து நிட்டை கூடுவதால் எய்துவது.

## 14. சந்திரசேகரர் வணக்கம்

**52.** முடியார் சடையின் மதியாய் போறிற்
    முழுநீறு சண்ணித்த மூர்த்தீ போற்றி
துடியார் இடைஉமையாள் பங்கா போற்றி
    சோதித்தார் காணாமை நின்றாய் போற்றி
அடியார் அடிமை அறிவாய் போற்றி
    அமரர்பதி ஆளவைத்தாய் போற்றி
கடியார் புரமூன்றும் எய்தாய் போற்றி
    கயிலை மலையானே போற்றி போற்றி—6,57,8 (70)

முடியார் சடையின் மதியாய் போற்றி-''ஓம் சந்த்ர ஸேகராய நம : என்ற நாமம். (சிவ சகஸ். 591)

முடியார் சடையின் மதியாய் : முடி-சிரசு-ஈசானம்

சடை-ஆதிசத்தி. இதனால் தொழிற்படுவது தற்புருடம்

அடியார் அடிமை அறிந்து ஆட்கொள்ளும் குரு—அகோரம்

துடியார் இடை—வாமதேவம்

முழுநீறு சண்ணித்த மூர்த்தி-முழுஉடம்பு-சந்தியோஜாதம்

இந்த 5 திருமுகங்களைக் கொண்டு 5 தொழில்களையும் செய்யும் சதாசிவப் பெருமானது வடிவம் சந்திரசேகரமூர்த்தி. சந்திரசேகர வடிவம் மகேசுவரமூர்த்தங்கள் 25-இல் ஒன்று. சந்திரசேகரர்—வடிவம், மூர்த்தி, சதாசிவர்—அவ்வடிவத்தை உடைய மூர்த்திமான். ஆதலால் சந்திரசேகர வடிவத்தில் சதாசிவர் வணங்கப்பெறுவர்.

## 15. சோமாஸ்கந்தர் வணக்கம்

**53.** ஐயன்காண்; குமரன்காண்; ஆதியரன்காண்;
    அடல்மழுவாள் தான்ஒன்று பியன்மேல் எந்து
கையன்காண், கடற்பூதப் படையினான்காண்;
    கண்எரியால் ஐங்கணையோன் உடல்காய்ந்தான்காண்
வெய்யன்காண்; தண்புனல்சூழ் செஞ்சடையான்காண்,
    வெண்ணீற்றான் காண், விசயற் கருள்செய்தான்காண்
செய்யன் காண், கரியன்காண், வெளியோன்தான் காண்;
    திருவாரூரான் காண், என் சிந்தை யானே —6, 24, 8

—திருவாரூர்த் திருத்தாண்டகம் (1) பா.8.

(அ) ஐயன்-தலைவன், சிவன்; குமரன்-ஸ்கந்தன்; ஆதி—ஆதிசத்தி; ஊமை; ஐயன்கான் குமரன்கான் ஆதியால் கான்-என்ற

அருள்வாக்கு உமையுடனும் கந்தனுடனும் கூடிய சோமாஸ் கந்தரைப் போற்றியது (ஸ+உமா+ஸ்கந்தர்=ஸோமாஸ்கந்தர்) இதுவும் 25 மகேசுவர மூர்த்தங்களில் ஒன்று. இதில் முருகப் பெருமான் சிவபெருமானுக்கும் உமையம்மைக்கும் நடுவே ஆனந்தமே வடிவமாக எழுந்தருளி இருப்பர். இந்த வடிவத்தைச் சிவஞான முனிவர்.

''கடவுட் பிராட்டி உடங்கிருப்பக் கதிர்வேற்காளை நள்ளிருப்ப
நடலைப் பிறவி மருந்தாகி வைகும் நாதன் திருவுருவம்''

என்று நமக்கு எடுத்துக்காட்டுகிறார், (காஞ்சிப்புராணம், சிவ புண்ணியப்படலம், 7) இந்த வடிவம் உயிர்களுக்கு உலக போகங் களையும் சிவபோகத்தையும் தரும் உருவம். இது கட்டுண்ட உயிர்களுக்கு உலக போகங்களைத் தந்து, இன்பதுன்பங்களை நுநரச்செய்து, அவற்றின் வாயிலாக அறிவு வளரச் செய்து, பின்னர் பாசநீக்கம் செய்து, பிறவிப் பிணியைப் போக்கி, முடிவில் சிவபோகத்தையும் அருளும் வடிவம். இந்த வடிவத்தில் நடுவே எழுந்தருளி இருக்கும் கந்தப்பெருமான் பாசநீக்கப் பெற்று, சிவபோகத்தில் அழுந்தி இருக்கும் சுத்தான்மாவைக் குறித்து நிற்பர். எனவே இவ்வடிவும் 'சி(ய)வ' என்ற மகாகாரண பஞ்சாக்கரமாக நிற்கும். இதில் 'ய' மறைந்து நிற்கும்.

இவ்வடிவத்தை ஆபரணங்கள், மாலைகள் ஆகியவற்றால் அணி செய்யப் பெற்றபோது, கந்தப்பெருமான் மறைந்து நிற்பர். இது ''தன்னை மறந்து தன் நாமம் கெட்ட'' சுத்தான்மாவாகிய 'ய', வகாரமாகிய அருட்சத்தியில் அடங்கி நின்று, சிவத்தோடு இரண்டறக் கலந்து நிற்கும் நிலையை நமக்கு உணர்த்தி நிற்பது.

(ஆ) காண்: 'ஸ்வாஹா' என்ற மந்திர முடிவு. இது ஏழு மந்திர முடிவுகளில்(சப்தகோடி மந்திரங்களில்)ஒன்று. முக்கியமாக பலி சமர்ப்பிக்கும்பேபது இம்முடிவுள்ள மந்திரம் ஓதப்பெறும்.

(இ) ஐயன்-சி; ஆதி-'வ'; (ஆதிசத்தி வேறு, பராசத்தி வேறு அல்ல. இரண்டும் ஒரே சத்தியின் இரு வேறு நிலைகள்; உயிர்களை மறைத்து நின்ற ஆதிசக்தியே பின்னர் பராசக்தியாக, அருட்சக்தி யாக மாறுகிறது என்று சைவ நூல்கள் கூறுகின்றன.)

குமரன்-சுத்தான்மா. 'ய'.

எனவே ''ஐயன் காண், குமரன் காண், ஆதியான் காண்'' என்ற அருள்வாக்கு ''ஓம் ஹாம் சிவாய ஸ்வாஹா'' என்ற மந்திரம்.

திருவாரூரில் எழுந்தருளியுள்ள தியாகராஜர் சோமாஸ்கந்தர். இவர் திருமாலால் வழிபடப்பெற்ற மூர்த்தி; அவரிடம் அம்மூர்த்

தியை இந்திரன் பெற்று வழிபட்டு வந்தான்; பின்னர் முகுந்த சக்ரவர்த்தி அம்மூர்த்தியை மண்ணுலகுக்குக் கொண்டுவந்து, திருவாரூரில் எழுந்தருளச் செய்து வழிபட்டு வந்தார் என்பது வரலாறு.

## 16. தட்சிணாமூர்த்தி வணக்கம்

**54.** அதிரா வினைகள் அறுப்பாய் போற்றி
ஆலநிழற்கீழ் அமர்ந்தாய் போற்றி
சதுரா சதுரக் குழையாய் போற்றி
சாம்பர் மெய்பூசும் தலைவா போற்றி
எதிரா உலகம் அமைப்பாய் போற்றி
என்றும் மீளாஅருள் செய்வாய் போற்றி
கதிரார் கதிருக்கோர் கண்ணே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. —6, 57, 2.

அதிரா வினைகள்-அதிர்க்கச் செய்யும் கொடிய வினைகள். இவற்றை அறுத்தல்-தட்சிணாமூர்த்தி குரு வடிவில் வந்து தனது கடைக்கண் நோக்கால் உயிர்களது சஞ்சித வினைகளைப் போக்குதல்.

ஆலநிழற்கீழ் அமர்ந்தவர்-தட்சிணாமூர்த்தி.

சதுரன்-திறமை உடையவன்; உயிர்களுக்கு உண்மைப் பொருளை உணர்த்தாமல் உணர்த்தும் திறமை உடையவர் தட்சிணாமூர்த்தி.

சதுரக்குழை-சிறந்து விளங்கும் குண்டலங்கள்; இவை ஆசாரிய கோலத்தை உணர்த்தி நிற்பன. சாம்பர் மெய் பூசுதல்-இதுவும் ஆசாரிய வடிவத்தை உணர்த்துவது.

எதிராஉலகம் அமைத்தல்-ஆசாரியனாய் வந்து உபதேசித்து, உயிர்க்கு உலகம் எதிர்ப்படாதவாறு செய்தல், நகார மகாரச் சார்புகளைவிட்டு நீங்கி, சிகார வகாரங்களைப் பற்றி நிற்கும்படி செய்தல்; உயிர் மும்மலங்களையும் விட்டு நீங்கி சிவத்தைச் சார்ந்து நிற்கும்படி செய்தல். இதனைத் தட்சிணாமூர்த்தியின் சின்முத்திரை நமக்கு உணர்த்துவதாக உள்ளது. சின்முத்திரையில் சிறு விரல், மோதிர விரல், நடு விரல் ஆகிய மூன்று விரல்களும் வெளியே நீண்டு நிற்க, சுட்டு விரலின் நுனி பெருவிரலின் அடியைத் தொட்டவாறு வளைந்து நிற்கும். இதிற் பெருவிரல்-இறைவனை, (சிவத்தை) உணர்த்தி நிற்பது; வளைந்த சுட்டு விரல்-சுட்டுணர்வு (ஆன்மபோதம்) நீங்கிய தூய உயிரை உணர்த்தி

நிற்பது. ஏனைய மூன்று விரல்களும் ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங்களையும் உணர்த்தி நிற்பன. மும்மலங்களையும் விட்டு நீங்கி நிற்கும் தூய உயிர், இறைவன் திருவடியைச் சார்ந்து, அத்திருவடி நீழலில் நின்று, சிவனோடு இரண்டறக் கலந்து, சிவானந்தத்தில் அழுந்தி நிற்பதை உணர்த்துவது சின்முத்திரை; தட்சிணாமூர்த்தி இம் முத்திரையால் உயிர்கள் அடையவேண்டிய மேலானநிலை இது எனச் சொல்லாமற் சொல்லி உணர்த்துகிறார்.

என்றும் மீளா அருள் செய்தல்: மீளா அருள்-மீளாமைக்கு ஏதுவானதிருவருள். மீளுதல்-மீண்டும் பாசத்தின்கண் செல்லுதல்; என்றும் மீளா அருள் செய்தல்-உயிர்களுக்கு என்றும் நகார மகாரச் சார்புகள் இல்லாதவாறு அருளுதல். கதிர்-உயிர்களுக்கு அறிவு விளங்கச் செய்யும் அதிதெய்வங்கள்; அயன், மால், உருத்திரன், மகேசன், சதாசிவன் ஆகிய பஞ்சகாரணேசுவரர்கள். கதிரார் கதிருக்கோர் கண்-இவர்களுள் உயிர்க்குயிராய் நின்று அவர்களுக்கு அறிவித்து வரும் ஞானசத்தி. இந்த ஞானசத்தியின் வடிவமே தட்சிணாமூர்த்தி; தட்சிணாமூர்த்தி ஞானசத்தியின் ஒரு கூறு, அம்சம்.

கயிலை மலையான்-தட்சிணாமூர்த்தி; இவர் கயிலையில் சனகாதி முனிவர்கள் நால்வருக்கும் வேத ஆகமங்களின் உட்பொருளைச் சின்முத்ரையால் சொல்லாமற் சொல்லி உணர்த்தியவர்.

55. மறிசேர் கையினனே மதமாவுரி போர்த்தவனே
குறியே என்னுடைய குருவேஉன் குற்றேவல் செய்வேன்;
நெறியே நின்அடியார் நினைக்கும் திருக்காளத்தியுள்
அறிவே உன்னையல்லால் அறிந்தேத்த மாட்டேனே.

—7, 26, 4, திருக்காளத்தி; பண். நட்டராகம்

மறிசேர் கையினன்-வேதநாதன்; வேதத்தின் உட்பொருள். என்னுடைய குரு-தட்சிணாமூர்த்தி.

நெறி-சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கு நெறிகளும் உணர்த்தும் உண்மைப் பொருள். இது தட்சிணாமூர்த்தியின் சின்முத்திரையால் உணர்த்தப்பெறும் முத்தி நிலை; சிவானந்த அனுபூதி பெற்று நிற்கும் பேரின்பநிலை. அறிவு-ஞானமே உருவாகிய தட்சிணாமூர்த்தி உருவம்.

உன்னை அல்லால் அறிந்து ஏத்தமாட்டேன்-நீயே சிவஞானத்தையும் சிவானந்தத்தையும் அருள்பவன் என அறிந்து, வேறு ஒருவரையும் வழிபடமாட்டேன்,

56. இதயதும் நாட்டத்தும் என்தன் சிரத்தும்
பதிவித்த பாதப் பராபரன் நந்தி
கதிவைத்த வாறும் மெய் காட்டிய வாறும்
விதிவைத்த வாறும் விளம்ப ஒண்ணாதே. —10. 1596
—திருமந்திரம், ஆறாம் தந்திரம், திருவடிப்பேறு, 24

இதயத்துப் பாதம் பதிவித்தல்—அருள்கூர்ந்து மானத தீட்சை செய்தல். (பாதம்-திருவருள், திருவடி)

நாட்டத்துப் பாதம் பதவித்தல்—நோக்கால் அருள் செய்தல்.

சிரத்துப் பாதம் பதிவித்தல்—சிரத்தில் பாத தாமரைகளை வைத்துத் திருவடி நீட்சை செய்தல்.

பராபரன் நந்தி—சிவபெருமான்; சிவபெருமானே தட்சிணா மூர்த்தியாய், குருவாய் வந்து உயிர்களுச்குப் பாசதீக்கம் அருளி அவற்றை ஆட்கொள்கின்றான்.

கதிவைத்தல்-உயிர் நகார மகாரச் சார்புகளை விட்டு சிவத்தையும் (சி), திருவருளையும் (வ) பற்றி நிற்கும்படி செய்தல். 'சிவாய' என்ற காரண பஞ்சாக்கரம் உணர்த்தும் நிலையில் நிற்கச் செய்தல். மெய்-உண்மைந் பொருள்; சிவம்.

மெய்காட்டுதல்-சிவத்தைக் காட்டி, சிவானந்தத்தை நுகரச் (அனுபவத்துச்) செய்தல்.

கதிவைத்தல், மெய்காட்டுதல்-இந்த இரண்டுமே சின்முத்திரையால் உணர்த்தப்பெறுவன.

விதிவைத்தல்-சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நெறிகளை உணர்த்தும் சிவாகமங்களைத் தோற்றுவித்தல்.

## 16-1. பிரமன் வணக்கம்

57. புவம்வளி கனல்புனல் புவிகலை உரைமறை திரிகுணம் அமர்நெறி
திவமலி தருசுரர் முதலியர் திகழ்தரும் உயிரவை அவைதம
பவமலி தொழிலது நினைவொடு பதுமநன் மலரது மருவிய
சிவனது சிவபுரம் நினைபவர் செழுநில னில்நிலை பெறுவரே.
—1, 21, 1, சிவபுரம், திருவிராகம், நட்டபாடை-1

புவி (பிருதுவி), புனல் (அப்பு), கனல் (தேயு), வளி (காற்று-வாயு), புவம் (விண்-ஆகாயம்) ஆகிய 5 அண்டங்களிலும் (கலா சகங்களிலும்) உள்ள உயிர்களது பிறவிக்கேற்ற படைப்புத்

தொழிலைச் (பவமலி தொழில்) செய்ய நினைந்து தாமரை மலர் மேல் பிரமனாக வீற்றிருந்த சிவனை நினைப்பலர் இவ்வுலகில் இம்மை மறுமைச் செல்வங்களோடு நிலைபெற்றருப்பர் என்கிறது இத்திருப்பாடல்.

திவம் மலிசுரர் முதலியவர் : திவம்-தோற்றம், பிறப்பு; இதனையுடைய தேவர், அசுரர், மனிதர் முதலியோர்.

சிவபெருமான் சுத்த உலகுகளில் தானே பிரமனாகி நின்று படைத்தல் தொழிலைச் செய்கிறார். அசுத்த உலகுகளில் முக்குணம் உடைய பிரமனுள் உயிருக்குயிராய் நின்று, அவனைக் கொண்டு படைத்தல் தொழிலைச் செய்கின்றார்.

## 16-2. விஷ்ணு வணக்கம்

58, மலைபல வளர்தரு புவியிடை மறைதரு வழிமலி மனிதர்கள்
நிலைமலி சுரர்முதல் உலகுகள் நிலைபெறு வகைநினை
வொடு மிகும்
அலைகடல் நடுஅறி துயில்அமர் அரிஉரு இயல்பரன் உறைபதி
சிலைமலி மதிள்சிவ புரநினை பவர்திரு மகளொடு திகழ்வரே.

—1, 21, 2

விண், வளி, அனல், புனல், மண் ஆகிய அண்டங்களில் உள்ள பல்வேறு உலகுகள் எல்லாம் தத்தம் கால எல்லைகள் வரை நிலை பெறுவதாக என்ற எண்ணத்துடன், அலைகளையுடைய பாற் கடலில் அறிதுயில் கொள்ளும் விஷ்ணு உருவொடு, அவர் இயல்பாகத் திகழ்கின்ற பரனாகிய சிவபெருமான் உறையும் இடமாகிய சிவபுரத்தை நினைபவர் மிக்க செல்வத்தோடு என்றும் பொருந்தி வாழ்வர் என்கிறது இப்பதிக இரண்டாம் பாடல்.

மறைதருவழி-வேத ஆகமங்கள் உணர்த்தும் நெறி; மனிதர்கள்-சகலர். சுரர்-நீர், அனல், கால், விண் ஆகிய மேல் உலகுகளில் வாழும் உயிர்கள்; பிரளயாகலர், விஞ்ஞானகலர்.

சிவபெருமான் தூய மாயா காரியமான உலகுகளில் விஷ்ணு வாக நின்று தாமே அவ்வுலகுகளைக் காக்கின்றார்; அவ்வுலகுகள் தத்தம் கால அளவுக்கு நிலையுறும்படி செய்கின்றார். அவ்வுலகு களில் உள்ள உயிர்களையும் காக்கின்றார். அசுத்தமாயா உலகு களையும், அவ்வுலகுகளில் உள்ள உயிர்களையும் முக்குணமயமாக உள்ள விஷ்ணு மூர்த்தியினுள் உயிருக்குயிராக நின்று, அவர் வழியாகக் காத்தல் தொழிலைச் செய்கின்றார்,

## 16-3. லிங்கோத்பவர் வணக்கம்

*(சில சிவாலயங்களில் கருவறைக்குப் பின் வெளிச்சுற்றில் உள்ள கோட்டத்தில் விஷ்ணுவுக்குப் பதிலாக லிங்கோத்பவர் காணப்படுவர்.)*

**59.** செங் கணானும் பிரமனும் தம்முளே
எங்கும் தேடித் திரிந்தவர் காண்கிலர்
இங்குற் றேன் என்(று) இலிங்கத்தே தோன்றினான்
பொங்கு செஞ்சடைப் புண்ணிய மூர்த்தியே. —5, 95, 11
—இலிங்கபுராணத் திருகுறுந்தொகை, 11

செங்கணான்-விஷ்ணு; தம்முளே-தம்முளே இகலிப்போர் செய்து; தேடி-அவர்கள்முன்னே தோன்றிய பெரிய அழல் தூணின் அடியைத் திருமால் பன்றியாகவும்,முடியைப் பிரமன் அன்னமாயும் தேடி; திரிந்து-பல ஊழிக்காலங்கள் தேடித் திரிந்தும், காண்கிலர்—முறையே அடிமுடிகளைக் காணாதாராயினர். இலிங்கத்தே தோன்றினான்—தேடி அயர்வுற்று நின்ற அவர்கள் முன்னே இலிங்க வடிவில் தோன்றினான். இம்மூர்த்தியே இலிங்கோத்பவ மூர்த்தி. செஞ்சடைப் புண்ணியன்-சிவபெருமான் பொங்கு-கங்கை ஆறு பொங்குகின்ற.

## 16-4. உருத்திரர் வணக்கம்

**60.** பழுதில கடல்புடை தழுவிய படிமுத லியஉல குகள்மலி
குழுவிய சுரர்பிறர் மனிதர்கள் குலமலி தரும் உயிர்
அவை அவை
முழுவதும் அழிவகை நினைவோடு முதல்உரு வியல்பரன்
உறைபதி
செழுமணி அணிசிவ புரநகர் தொழும்அவர் புகழ்மிகும்
உலகிலே.—1, 21, 3

படி-பூமி; இங்கு மண் அண்டம்; பிருதுவி கலா சக்கரத்தில் உள்ள பல்வேறு உலகுகள்; படி முதலிய உலகுகள்-மண், நீர், அனல், கால், விண் ஆகிய அண்டங்களில் உள்ள உலகுகள்; இவ்வுலகுகளும், இவ்வுலகுகளில் உள்ள பல்வேறு வகைப்பட்ட உயிர்களும் (உயிர்களது உடம்புகளும்) அழியும் வகை சங்கற்பம் (நினைவு) செய்பவர் உருத்திரர், இதுவே அவர் செய்யும் சங்காரம் ஆகிய தொழில்.

## 17. பஞ்சலிங்க வணக்கம்

(பெரும்பாலான சிவாலயங்களில் கருவறைக்கு வெளியே உள்ள பிராகாரத்தில் பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம்ஆகிய ஐந்து

இலிங்கத் திருமேனிகளும் காணப்பெறும். இவ்விலிங்கத் திருமேனி களுக்கு உரிய போற்றிகள்.)

61. பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி
நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி
வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி
வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் போற்றி
அளிபவர் உள்ளத்து அமுதே போற்றி —8, 4, 137-142

பார்-மண் மண்டலம், இதற்கு அதிபதி பிரமன். பிரமனை விஷ்ணு தொழிற்படுத்துவர்; விஷ்ணுவை உருத்திரர் தொழிற்படுத்துவர்; உருத்திரரை மகேசுரரும், மகேசுரரைச் சதாசிவமும் தொழிற் படுத்துவர். இவ்வாறு தொழிற்படுத்தும்போது விஷ்ணு, உருத் திரர், மகேசர், சிதாசிவர் ஆகிய நால்வரும் முறையே பிரமன், விஷ்ணு, உருத்திரர், மகேசர் ஆகிய நால்வருள்ளே உயிர்க்குயிராய் நின்று தொழிற்படுத்துபவர். ஆதலின் பிரமனில் நாம் பிரமன், விஷ்ணு முதலிய ஐவரையும் நினைந்து வழிபட வேண்டும். இதனையே 'பாரினில் ஐந்தாய் பரந்தாய் போற்றி' என்ற வணக்க மந்திரத்தால் நமக்கு மணிவாசகர் உணர்த்துகிறார்.

பிரமன், விஷ்ணு, உருத்திரர், மகேசர், சதாசிவர் ஆகிய ஐவரையும் தொழிற்படுத்தும் (முறையே சத்தியோ சாதம், வாமதேவம், அகோரம், தற்புருடம், ஈசானம் ஆகிய) ஐந்து சக்திகளையும் நாம் பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் ஆகிய இலிங்கங்களில் வழிபடுகிறோம். எனவே 'பாரினில் ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி' என நாம் பிருதுவி லிங்கத்தை வணங்கும்போது, அதில் பிரமன் முதலிய ஐந்து காரணேசுவரர்களையும் சத்தியோசாதம் முதலிய ஐந்து சக்தி களையும் நினைந்து வணங்கவேண்டும்.

நீரினில் நான்கு-பிருதுவி லிங்கத்தில் அயன் முதலிய ஐந்து காரணேசுவரர்களையும், ஐந்து சக்திகளையும் வணங்குதல் போன்று அப்பு லிங்கத்தில் விஷ்ணு (திருமால்) முதலிய 4 கார ணேசுவரர்களையும், வாமதேவம் முதலிய நான்கு சக்திகளையும் நினைந்து வழிபடவேண்டும். இதற்குரிய மந்திரம் 'நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி' என்பது.

தீயிடை மூன்று-தேயு லிங்கத்தில் உருத்திரர், மகேசர், சதாசிவர் ஆகிய மூன்று காரணேசுவரர்களைவும், அகோரம், தற்புருடம், ஈசானம் ஆகிய மூன்று சக்திகளையும் நினைந்து

''தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி'' என்ற மந்திரத்தைக் கொண்டு வணங்குதல் வேண்டும்;

வளியிடை இரண்டு-வாயு லிங்கத்தில் மகேசர், சதாசிவர் ஆகிய இரு காரணேசுவரர்களையும், தற்புருடம், ஈசானம் ஆகிய இரு சக்திகளையும் நினைந்து''வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி'' என்று வாழ்த்தி வணங்குதல் வேண்டும்;

வெளியிடை ஒன்று-ஆகாயத்தில் சதாசிவர் ஆகிய காரணேசுவரரையும் அவரைத் தொழிற்படுத்தும் ஈசான சத்தியையும் நினைந்து 'வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் போற்றி'' என்று வாழ்த்தி வணங்கவேண்டும். 'ஐந்து, நான்கு, மூன்று, இரண்டு, ஒன்று என்று இம்மந்திரங்கள் கூறுவதால், பிருதுவீ முதலிய சிவலிங்கங்களில் காரணேசுவரர்களையோ அல்லது சத்திகளையோ வணங்குதல் வேண்டும் என்பது பெறப்பெறும். காரணேசுவரர்கள் சத்திகள் ஆகிய இருவரையும் நினைந்து வழிபடல் சிறந்தது.

## 18. சமயாசாரியர் நால்வர் வணக்கம்

### 18-1. ஞானசம்பந்த மூர்த்திகள்

62. எம்பந்த வல்வினைநோய் தீர்த்திட்(டு) எமைஆளும்
சம்பந்தன் காழியர்கோன் தன்னையும் ஆட்கொண்டருளி
அம்புந்து கண்ணாளும் தானும் அணிதில்லைச்
செம்பொன்செய் அம்பலமே சேர்ந்திருக்கை ஆயிற்றே;

—9, 19, 4, நம்பிகாடாநம்பி கோயில் 4, சாரளபாணி.

பந்தம்-கட்டு; பாசம்; வல்வினை-கன்ம மலம்; பந்தமாகிய கன்ம மலம்; நோய்-ஆணவ மலம். எம்பந்த வல்வினை நோய் தீர்த்தல்-நகார மகாரச் சார்புகளை விட்டு நீங்கச் செய்தல். எமை ஆளுதல்-'சிவாய' என நின்று இறைபணியில் நிற்கச் செய்தல்; எமது இச்சை, அறிவு, செயல்கள் எல்லாம் சிவனது இச்சை, அறிவு, செயல்களாகத் திகழும்படிச் செய்தல்.

### 18-2. திருநாவுக்கரசு சுவாமிகள் வணக்கம்

63. அல்லியம் பூம்பழனத்(து) ஆமூர் நாவுக்கரசைச்
செல்ல நெறிவகுத்த சேவகனே! தென்தில்லைக்
கொல்லை விடையேறி! கூத்தா(டு) அரங்காகச்
செல்வம் நிறைந்தசிற் றம்பலமே சேர்ந்தனையே!

—9, 19, 3, நம்பிகாடநம்பி, கோயில் 3, சாரளபாணி.

செல்ல நெறி வகுத்தல்-முத்திநெறி காட்டுதல்.

செல்வம்-அருட்செல்வம்; செல்வம் நிறைந்த சிற்றம்பலம்-சிவனது திருவருள் வியாபகம் உற்ற நுண்ணிய ஞானவெளி; பரம வியோமம்; இது சத்தியன்றி வேறல்ல; இது 'வ'காரம்; சேர்ந்தது-சிவம், சிகாரம். ''செல்வம் நிறைந்த சிற்றம்பலமே சேர்ந் தனையே என்பது 'வசி' என்ற மகா காரண பஞ்சாக்கரம்.

## 18-3. சுந்தரமூர்த்தி சுவாமிகள் வணக்கம்

**64.** களையா உடலோடு சேமான் ஆரூரன்
விளையா மதமாறா வெள்ளானை மேல்கொள்ள
முளையா மதிசூடி மூவா யிரவரொடும்
அளையா விளையாடும் அம்பலம்நின் ஆடரங்கே—9,19,4

களையா உடல்-நீங்காது கயிலாயம் செல்லும் உடல்; சீவகரணங்கள் எல்லாம் சிவகரணங்களாய்த் திகழ்ந்த உடல்.

ஆரூரன்-சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

வெள்ளானை-அயிராவதம் என்ற வெள்ளை யானை; கயிலா யத்திலுள்ள யானை.

அளையா-அளைந்து; கலந்து. உயிர்களுடன் கலந்து நின்று.

விளையாடல்-ஐந்தொழிற் கூத்து நவிலுதல்; விளையாட்டுப் போன்று சிரமமின்றி தனது சங்கற்பத்தாலே (கருதுதலாயே) படைத்தல் முதலிய ஐந்து தொழில்கலைச் செய்தல்.

அம்பலம்-'வ'; நின்-'சி';

அம்பலம் நின் ஆடரங்கு-'வசி' என்ற மகாகாரண பஞ்சாக் கரத்தில் நின்று ஆனந்தக் கூத்து ஆடுவதை உணர்த்தி நின்றது.

## 18-4. மாணிக்கவாசகர் வணக்கம்

**65.** பாய்பரியோன் தந்த பரமானந் தப்பயனைத்
தூயதிரு வாய்மலரால் சொற்செய்து—மாயக்
கருவாதை யாம்அறிவா வாறுசெய்தான் கண்டாய்
திருவாத வூர்ஆளும் தேன். —திருக்கடவூர் உய்யவந்த
தேவ நாயனார்; திருக்களிற்றுப்படியார், 73

பாய்பரியோன்-மாணிக்கவாசக சுவாமிகள் பொருட்டாக தாவுகின்ற குதிரைமேல் எழுந்தருளிவந்த சிவபெருமான்.

அவர் தந்த பரமானந்தப் பயன்-அவர் மணிவாசகப் பெருமா னுக்கு அருளிய பேரானந்தக் கடலாகிய சிவபோகத்தின் பயன்.

சொற்செய்து-மணிவார்த்தைகளாக, திருவாசகங்களாகச், செய்தருளி.

கருவாதை நாம் அறியாவாறு செய்தல்-நகார மகாரச் சார்பு நீக்கம்.

திருவாதவூர் ஆள்வது. 'வ'; தேன்-பேரின்ப காரணனாகிய சிவன். 'சி'; திருவாதவூர் ஆளும் தேன்-'வசி' என்ற மகா காரண பஞ்சாக்கரம்.

## 18-5. நால்வர்

66. போற்றியோ நமச்சிவாய ஞான சம்பந்தர் பொற்றாள்
போற்றியோ நமச்சிவாய ஞான நாவரசர் பொற்றாள்
போற்றியோ நமச்சிவாய ஞான ஆரூர் பொற்றாள்
போற்றியே நமச்சிவாய ஞான வாசகனார் பொற்றாள்.

67. பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
ஆழிமிசைக் கன்மிதப்பில் அணைந்தபிரான் அடிபோற்றி
வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம்போற்றி
ஊழிமலி திருவாத வூரர்திருத் தாள்போற்றி.

—சேக்கிழார் புராணம், காப்பு, 6.

## 19. அறுபத்துமூவர்

68. தத்து மூதெயில் மூன்றும் தழல்எழ
முத்து மூரல் முகிழ்த்த நிராமய
சித்து மூர்த்திகள் தாள்இணை சேர்அறு
பத்து மூவர் பதமலர் போற்றுவாம்.

—காஞ்சிப்புராணம், பாயிரம் 16.

தத்துமூதெயில்-விண்ணில் இடம் பெயர்வனவாகிய மூன்று கோட்டைகள், புரங்கள். நிராமயம்-இயல்பாகவே பாசங்களின் நீங்கி நிற்றல், இந்த அருட்குணத்தை உடைய சிவபெருமானே உயிர்களது மும்மலக் கட்டுகளைப் போக்க வல்லவர். முப்புரம் எரித்தது உயிர்களது மும்மலங்களும் நீக்குவதை உணர்த்துவது. சித்துமூர்த்தி-ஞானமே உருவான சிவபிரான்.

## 20. சேக்கிழார் சுவாமிகள் வணக்கம்

69. தூக்கு சீர்த்திருத் தொண்டத் தொகைவிரி
வாக்கி னால்சொல் வல்ல பிரான்எங்கள்
பாக்கி யப்பயனாப் பதி குன்றைவாழ்
சேக்கி ழான்அடி சென்னி இருத்துவாம்.

—காஞ்சிப்புராணம், பாயிரம் 17.

தூக்கு-துன்பக் கடலினின்றும் உயிர்களை இன்பக் கரைக்குத் தூக்கும். சீர்-சிறப்பு; அடியாராய் (அடி ஆர்பவராய்) சிவானந் தத்தை நுகரும் சிறப்பு.

## 21. சண்டேசர் வணக்கம்

70. அண்டமார் அமரர் கோமான் ஆதிஎம் அண்ணல் பாதம்
கொண்டவன் குறிப்பினாலே கூப்பினான் தாபரத்தைக்
கண்டவன் தாதை பாய்வான் காலற எறியக்கண்டு
தண்டியார்க் கருள்கள்செய்த தலைவர் ஆப்பாடியாரே

—4, 48, 4, திருஆப்பாடி, திருநேரிசை 4.

எம் அண்ணல் பாதம் கொண்டவன்-எம் முதல்வனாகிய சிவபெருமான் திருவடியைத் தமது மனத்துட்கொண்டு வழிபட்ட சண்டேசர்.

குறிப்பினாலே—சிவலிங்க பாவனையினாலே; தாபரம்-பூமி, பிருதுவிதத்துவம்; தாபரத்தைக் கூப்பினான்-பிருதுவிதத்துவத்தா லான மணலால் சிவலிங்கம் தாபித்து, அதில் சிவபெருமானை வழிபட்ட சண்டேசர்.

அருள்கள் செய்தது-தாம் உண்ட உணவும், உடுப்பனவும், சூடுவனவும் ஆகிய அனைத்தும் சண்டேசருக்கு உரிமையாகும்படி அருளிச் செய்தது; தொண்டர்களுக்குத் தலைமையும் அருளிச் செய்தது; சண்டேசன் ஆம் பதமும் அருளிச் செய்தது; சண்டேசருக் குரிய மந்திரம் "ஓம் ஹாம் த்வநி சண்டாய நம :" என்பது.

## 22. அம்மை வழிபாடு

71. எட்டு மூர்த்தியாய் நின்றிய லும்தொழில்
எட்டு வான்குணத் தீசன் எம்மான்தனை
எட்டு மூர்த்தியும் எம்இறை எம்முளே
எட்டு மூர்த்தியும் எம்உள் ஒடுக்குமே. —5, 89, 8

—தனித்திருக் குறுந்தொகை

(அ) எட்டு மூர்த்தியாய் நின்று இயலும் தொழில் : இங்கு எட்டு மூர்த்திகள் என்றது மண், நீர், அனல், காற்று, ஆகாயம், சந்திரன், சூரியன், இயமானன் என்ற இறைவனது எட்டு வடிவங்களை. இந்த வடிவங்களை உடைய சத்திகள் முறையே வாமை, ஜேஷ்டை, ரௌத்ரி, காளி, கலவிகரணி, பலவிகரணி, பலப்பிரமதனி, சர்வபூதமணி என்ற எண்மருமாம். இந்த எட்டுச் சத்திகளும் அம்பிகையினது முதல் ஆவரணத்தில் வழிபடப் பெறுவர். நடுவில் சதாசிவரின் சத்தியான மனோன்மனி வழிபடப் பெறுவர்.

இச்சத்திகளை முதல் ஆவரணத்திற் பூசிக்கும் முறையும் இச்சத்திகளுக்குரிய மந்திரங்களும் :

1. கிழக்கு திக்கில்—ஓம் ஹ்ரீம் வாமாயை நம :
2. அக்னி ,, —ஓம் ஹ்ரீம் ஜேஷ்டாயை நம :
3. தெற்கு ,, —ஓம் ஹ்ரீம் ரௌத்ரியை நம :
4. நிருதி ,, —ஓம் ஹ்ரீம் காள்யை நம :
5. மேற்கு ,, —ஓம் ஹ்ரீம் கலவிகர்ண்யை நம :
6. வாயு ,, —ஓம் ஹ்ரீம் பலவிகர்ண்யை நம :
7. வடக்கு ,, —ஓம் ஹ்ரீம் பலப்ரமதின்யை நம:
8. ஈசான ,, —ஓம் ஹ்ரீம் ஸர்வபூததமன்யை நம :

நடுவில் ,, —ஓம் ஹ்ரீம் மனோன்மன்யை நம :

—அகோர சிவாசாரியர், பரார்த்த நித்திய பூஜாவிதி.

இந்த எட்டுச் சக்திகளும் அசுத்த உலகங்களில் ஐந்தொழில் களையும் செய்யும் சத்திகள் (சதரத்னசங்கிரகம், சு. 12)

(ஆ) எட்டு மூர்த்தியும் எம் இறை : இங்கு எம் 'இறை' என்றது வாமை, ஜேஷ்டை முதலிய எட்டு சத்திகளது சத்திமான் களாக விளங்கும் மூர்த்தீஸ்வரர்களாகிய பவர், சர்வர் முதலிய எண்மரை. இவர்கள் பற்றிய விவரங்களைக் கீழே உள்ள அட்ட வணையிற் காண்க.

| | மூர்த்தி (சத்தி) | மூர்த்தியின் உருவம் | மூர்த்தீஸ்வரர் | தொழில் |
|---|---|---|---|---|
| 1. | வாமை | பிருதுவி | பவர் | சிருஷ்டித் தொழிலை விருத்தி செய்தல் |
| 2. | ஜேஷ்டை | அப்பு | சர்வர் | எல்லா உயிர்களையும் காத்தல், |
| 5. | ரௌத்ரீ | தேயு | உருத்திரர் | அழித்தல் தொழிலை விருத்தி செய்தல். |
| 4, | காளி | வாயு | பீமர் | மறைத்தல் தொழிலை விருத்தி செய்தல். |
| 5. | கலவிகரணி (கலா-அவயவம் விகரணி-இல்லாதவள்) | ஆகாயம் | மகாதேவர் | அருளல் தொழிலை விருத்தி செய்தல். |
| 6. | பலவிகரணி (பலத்தை விசேடமாகக் கொடுப்பவள்) | சந்திரன் | ஈசானர் | சிவபுண்ணியங்களின் பலத்தை விசேடமாக அருளுதல். |
| 7. | பலப்ரமதனி | சூரியன் | உக்கிரர் | பாசத்தை நீக்குதல். |
| 8. | சர்வபூததமனி | ஆன்மா | பசுபதி | ஆன்மாக்களை அடக்கித் தன்வழிச் செலுத்துதல். |

ருக்வேதம், ''ப்ருதிவ்யோ பவ:; ஆபச் சர்வ:; அக்நே ருத்ரே:; வாயுப்பீம:; ஆகாசஸ்ய மஹாதேவ:; சூர்யஸ்யோக்ர:; சந்திரஸ்ய சோம :; ஆத்மாந : பசுபதி'' என்று கூறுகிறது.

இந்த பவர், சர்வர் முதலிய எட்டு மூர்த்தீஸ்வரர்களிலும் கலந்து நின்று, சிவபெருமான் நமக்குப் பாச நீக்கத்தை அருளி நம்மை இறைபணியில் நிற்கச் செய்கிறார்; அதாவது நமது இச்சை, அறிவு, செயல் ஆகிய மூன்றும் அவரது இச்சை, அறிவு, செயல்களாகவே நிகழும்படி செய்கிறார்.

இந்த வாமாதி எட்டு மூர்த்திகளிலும், பவாதி எட்டு மூர்த்தீஸ்வரர்களிலும் இருந்து இவர்களைத் தொழிற்படுத்தும் சத்தி மனோன்மனி; சதாசிவரது சத்தி. மனோன்மனி சதாசிவரின் வடிவம். பக்குவம் பெற்ற உயிர்களது மலத்தைப் போக்கி, சிவத்தன்மை அருளுவதால் இவள் மனோன்மனி எனப் பெயர் பெறுகின்றாள்.

ஓம் பவாய தேவாய ஸ்வாஹா,<br>
ஓம் ஸர்வாய தேவாய ஸ்வாஹா,<br>
ஓம் ருத்ராய தேவாய ஸ்வாஹா,<br>
ஓம் பீமாய தேவாய ஸ்வாஹா,<br>
ஓம் மஹாதே தேவாய ஸ்வாஹா,<br>
ஓம் ஈசானாய தேவாய ஸ்வாஹா,<br>
ஓம் உக்ராய தேவாய ஸ்வாஹா,<br>
ஓம் பசுபதயே தேவாய ஸ்வாஹா,

என்ற மந்திரங்களால் இந்த எட்டு மூர்த்தீஸ்வரர்களையும் யஜுர்வேத மந்திரப் பிரசனம் போற்றுகின்றது. (செந்திநாதய்யர் 'தேவாரம் வேதசாரம்')

(இ) எட்டுவான்குணத்து ஈசன் : இறைவனது எட்டு அருட்குணங் களே அவனது வடிவம் ஆதலால், இவையும் அவனது சத்திகள் ஆகின்றன. எட்டு அருட்குணங்களாவன :

1. தன்வயம் (சுதந்தரத்வம்)
2. தூய உடம்பு உடைமை (விசுத்த தேகம்)
3. இயற்கை உணர்வு (அநாதி போதம்)
4. முற்றுணர்வு (சர்வஞ்ஞத்வம்)
5. இயல்பாகவே பாசம் இன்மை (நிராமயம்)
6. பேரருள் (அலுப்த சத்தி)
7. முடிவில் ஆற்றல் (அநந்த சத்தி)
8. வரம்பில் இன்பம் (திருப்தி)

(ஈ) எட்டு மூர்த்தியும் எம்முள் ஒடுங்குமே : இங்கு எட்டு மூர்த்தி என்றருளியது ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோஜாதம் என்ற சதாசிவ சத்திகள் ஐந்தையும், ஹாரிணீ, ஜனனீ, ரோதயித்ரீ என்னும் மூன்று சத்திகளையுமாம். இவற்றுள் ஈசானம் சதாசிவமூர்த்தியின் சிரசு; தற்புருடம் அவர் முகம்; அகோரம் அவரது இருதயம்; வாமதேவம் குய்யம்; சத்தியோ ஜாதம் பாதம், இவ்வைந்து சத்திகளும் சதாசிவமூர்த்தியின் உடம்பு. ஹாரிணீ, ஜனனீ, ரோதயத்ரி என்னும் சத்திகள் அவரது உட்கரணங்கள். (நமக்குள்ள மனம், புத்தி, அகங்காரம் போன்று). இந்த எட்டு சத்திகளும் இறைவனது தூல சூக்கும உடம்புகள். (பௌஷ்கர த்ரவிட டீகா; பதிப்படலம்)

ஈசான சத்தி-மேலான எல்லை; அருளல் தொழிலைச் செய்வது. தற்புருஷ சத்தி-சுத்த மாயையினது நாதம் முதவிய தத்துவங் களால் எல்லா உலகுகளையும் விரியச் செய்வது; மறைத்தலைச் செய்வது. அகோர சத்தி-(மும்மலமே கோரம்; அதற்கு விரோதி யாக இருப்பது அகோரம்), கோரமாகிய பாசங்களை நீக்கும் சத்தி' அழித்தலைச் செய்வது. வாமதேவ சத்தி-எல்லா உலகு களையும் காக்கும் சத்தி; புத்திரர்களுச்குக் காரணமான சத்தி, சத்தியோஜாதம்-படைக்க வேண்டும் என்று விரும்பிய மாத்தி ரத்தில் உடனே படைக்கும் சத்தி; உலகுகள் எங்கும் வியாபகமாக இருக்கும் சத்தி. இந்த சத்திகள் ஐந்தும் ஐந்து மந்திரங்கள் என்று சொல்லப்பெறுவன. இவை பஞ்சப் பிரம மந்திரங்கள்; இறைவனது மந்திரத் திருமேனியாக இருப்பன. இவை ஐந்தும் சதாசிவரை விட்டுப் பிரியாத சத்திகள்; ஐந்தொழில்களையும் செய்யும் சத்திகள். இந்த ஐந்து சத்திகவையும் செலுத்தும் சத்திகள் ஹாரிணீ, ஜனனீ, ரௌத்யிரி ஆகிய மூன்றும்.

ஹாரிணீ - சிவபெருமானின் சம்ஹார சாமர்த்தியத்தை உடையது; மேலும் ஆயிர்களை 36 தத்துவங்களையும் கடந்து நிற்கும்படி செய்யும் சத்தி.

ஜனனீ - எல்லா உலகுகளில் உற்பத்திக்குக் காரணமாக உள்ள சத்தி; இது அளவிறந்த பிரகாசத்தை உடையது,

ரோதயித்ரி - எல்லா வகையான உயிர்களுக்கும் நியதிப்படி போகத்தைத் தருவது. போகங்களில் நியதி செய்வது.

இந்த மூன்று சத்திகளும் சிவபெருமானுடைய இந்திரியங்கள் என்று சொல்லப்பெறுவன. இவையும் என்றும் சிவத்தை விட்டுப் பிரியாதன; சிவனது ஆற்றல்களாகத் திகழ்வன.

அம்மையார்,

(i) மண், நீர் முதலிய எட்டு வடிவங்களில் நிலவுகிறாள் என்றும்,

(ii) வாமை, ஜேஷ்ட முதலிய எட்டு சத்திகளாய் மண் முதலிய எட்டு வடிவங்களிலும் நின்று அவற்றைத் தொழிற்படுத்து கிறாள் என்றும்,

(iii) வாமை. ஜேஷ்டை முதலிய எட்டு சத்திகளுக்கு மூர்த்தீஸ்வரர்களாய் உள்ள பவர், சர்வர் முதலிய எண்மரையும் மனோன்மனியாக நின்று தொழிற்படுத்துகிறாள் என்றும்,

(iv) எட்டு அருட்குணங்களுமே சத்திகளாய் நிற்க, அவள் இறைவனது வடிவாய்த் திகழ்கிறாள் என்றும்,

(v) ஈசானம், தற்புருடம் ஆகிய ஐந்து சத்திகளாய், சிவபிரா னுடைய மந்திரத் திருமேனியாய்த் திகழ்கிறாள் என்றும்,

(vi) ஹாரிணீ, ஜனனீ, ரோதயித்ரி என்ற சத்திகளாய் நின்று சிவபிரானுடைய ஆற்றல்களாய், அவரை விட்டுப் பிரியாது நிற்பவள் என்றும் நினைந்து, அவளை நாம் வழிபடவேண்டும் என்பதனை இத் தனிக் குறுந்தொகைப் பாடலால் அப்பர் அடிகள் நமக்கு அறிவுறுத்துகின்றார்.

72. முல்லைஅம் கண்ணி முடியாய் போற்றி
முழுநீறு பூசிய மூர்த்தீ போற்றி
எல்லை நிறைந்த குணத்தாய் போற்றி
ஏழ்நரம்பின் ஓசை படைத்தாய் போற்றி
சில்லைச் சிரைத்தலையில் ஊணா போற்றி
சென்றடைந்தார் தீவினைகள் தீர்ப்பாய் போற்றி
தில்லைச் சிற்றம்பலம் மேயாய் போற்றி
திருவீரட் டானத்தெம் செவ்வா போற்றி —6, 5, 3
—திருவதிகைப் போற்றித் திருத்தாண்டகம்-3

(i) முடி-சிகை; ''முடியாய் போற்றி''-ஓம் ஹூம் சிகாயை நம; என்ற சிகாமந்திரம்,

(ii) கண்ணி-சிரசில் அணியப்படுவது, ''முல்லை அம் கண்ணி முடியாய் போற்றி'' ஓம் ஹூம் சிரசே நம: என்று சிரசு மந்திரம்

(iii) முழுநீறு பூசிய மூர்த்தி-சிவபெருமான் திருநீற்றினையே கவசமாக அணிந்துள்ளார், கவசம்-ரட்சை: காப்பாற்றுவது.

''ஆனந்த நீற்றுக்கவசம் அடையப் புகுமின்கள்
வானவூர் கொள்வோம் நாம் மாயப்படை வாராமே''

என்பது மணிவார்த்தை. (திருவாசகம், திருப்படை எழுச்சி, பா.1; 8,615)

''முழுநீறு பூசி மூர்த்தி போற்றி'' -ஓம் ஹைம் கவசாய நம: என்ற கவச மந்திரம்.

(iv) ஏழ் நரம்பின் ஓசை-ஏழு உலகுகளிலும் ஏழு வகை அண்டங்களிலும்; (மணி, நீர், அனல், கால், ஆகாயம், சூரியன், சந்திரன் ஆகிய 7 அண்டங்களிலும்) நிலைத்துநிற்கும் எழுவகை மூல ஒலி அலைகள் (fundamental virations); இவற்றிற்கு முதற் காரணமாக (material cause) இருப்பது நாத தத்துவம். எல்லா உலகுகளுக்கும் முதற்காரணமாக இருப்பது நாத தத்துவம். எல்லா உலகுகளையும் படைத்துக்காத்து ஒடுக்கும் சத்தி-நேத்திரம்

''ஏழ் நரம்பின் ஓசை படைத்தாய் போற்றி''-ஓம் ஹௌம் நேத்ரோப்யோ நம'' என்ற நேந்திர மந்திரம்.

(v) சென்றடைந்தார் தீவினைகள் தீர்த்தல்-நகார மகாரச் சார்புளை விட்டுத் தனது திருவடியைப் பற்றி நிற்பாரது தீவினை களின் பயன்களாகிய பாவங்களைப் போக்குதல். ''எந்தச் சக்தி பாவத்தைப் போக்குகிறதோ அது அஸ்திரம்'' என்று கூறுகிறது காமிகாகமம் (அர்ச்சனை விதிப்படலம்). எனவே, சென்றடைந் தார் தீவினைகள் தீர்ப்பாய் போற்றி'' என்ற அருள்வாக்கு : ''ஓம் ஹம் அஸ்த்ராய நம'' என்ற அஸ்திர மந்திரம்.

(vi) தில்லைச் சிற்றம்பலமேயாய்; இதனை 'தில்லைமேயாய்; சிற்றம்பலமேயாய்' என இருவகையாகக் கொள்ளுதல் வேண்டும். தில்லை-பேரம்பலம்; சிதம்பரம்; பரஞானவெளி; சிற்றம்பலம்; சிறுமை-அம்பலம்-சிற்றம்பலம். நுண்ணிய ஞானவெளி; இது இதயத்தில் உள்ளது. இதனை இதய புண்டரிக வீடு என்று உபநிடதங்கள் கூறுகின்றன. பேரம்பலத்தேயன்றி, சிற்றம்பல மாகிய நமது இதய தாமரையிலும் நடேசப் பெருமான் கூத்து ஆடுகின்றார். எனவே ''சிற்றம்பலமேயாய் போற்றி'' என்பது ''ஓம் ஹாம் ஹ்ருதயாய நம :'' என்ற இருதய மந்திரம்.

எனவே இத்திருத்தாண்டகம் இதயம், சிரசு, சிகை, கவசம், நேத்திரம், அஸ்திரம் ஆகிய ஆறு அங்க(ஷடங்க) மந்திரங்களாகத் திகழ்வது காணப்பெறும்.

இறைவனது வடிவே சத்தி. ஆதலின் இந்த அங்க மந்திரங்கள் சத்தி வழிபாட்டுக்கும் உரியன ஆகின்றன. இந்த அங்க மந்திரங்கள் பல்வேறு சத்திகளாகத் திகழ்வன.

(i) இருதய மந்திரம் : ஞானசத்தி; ''எண்ணில் இதயம் இறைஞான சத்தியாம்'' என்பது திருமூலதேவர் திருவாக்கு. (10, 1744); 7-ஆவது தந்திரம். சதாசிவ லிங்கம், பா. 15)

''சதாசிவனுக்கு இதய மந்திரம் ஞானம் என்று சொல்லப் படும்'' என்கிறது பௌஷ்கர ஆகமம் (பதிபடலம்).

''நல்லோர் உணர்வரு ஞானமது இதயம்'' என்னும் சதாசிவ ரூபம் (பா. 130) உயிர்களுக்கு மெய்ஞானத்தை உணர்த்தும் திருவருட் சத்தியே இதய மந்திரம்.

(ii) சிரசு மந்திரம் : பராசத்தி; ''விண்ணில் பரை சிரம்'' என்பது திருமந்திர வாக்கு (10, 1744). விண்-இங்குச் சாந்திய தீதகலா சக்கரமாகிய விண்மண்டலத்தை உணர்த்தி நிற்பது. சாந்தியதீத கலாசக்தி பராசக்தி.

விண்ணில் பரை-சாந்தியதீத கலாசக்கரத்தில் அதிகாரம் உடைய பராசக்தி. சதாசிவமூர்த்தியே சாந்தியதீத கலாசக்கரத்து அதிதெய்வமாவர்; பராசக்தியுடன் நின்று உயிர்களுக்குப் பேரின் பத்தை அருள்பவர்; ஐந்தொழில்களில் ஒன்றாகிய அருளலைச் செய்பவர். எனவே சிரசு ''உரை இறந்து நின்ற சுகம்'' என்று சொல்லப்பெறும். உரை இறந்து நின்ற சுகம்-சொல்லொணாத பேரானந்த அனுபவம்; சிவானந்தானுபவம். இதனையே 'திருப்தி' என்ற குணம் என்னும் வடமொழி நூல்கள்.

''சர்வோத்தர குணம் ஆகிய நித்திய திருத்தியாகிற சத்தி சிரசு'' என்பர் சிவாக்கிர யோகிகள். (சிவஞான சித்தியார் சூத். 1, பா, 59 உரை) இறைவனது அருட்குணங்கள் எட்டினுள் மிகவும் மேன்மையானது (சர்வேத்தரம்) 'திருப்தி' என்ற அளவிலா ஆனந்தம். ''அளவிலா ஆனந்தம் அளித்தென்னை ஆண்டானை'' என்பது மணிவாசகப் பெருமாள் மணிவார்த்தை.

''சர்வோன்னதமாய் இருக்கிற தர்மமானது சிரசு என்று சொல்லப்படும்'' என்கிறது பௌஷ்கர திரவிட டீகா (பதிபடலம்) இங்குச் சர்வோன்னதமாய் இருக்கும் தர்மம் என்றது இறைவனது அருட்குணங்கள் எட்டினுள்ளும் மேலானதான பேரின்பமாகிய 'திருப்தி' என்ற குணத்தை. தர்மம்-குணம்.

(iii) சிகா மந்திரம் : ஆதிசக்தி. ''மிக்க சிகை ஆதி'' என்பது திருமூலர் திருவாக்கு (10, 1744); ஆதி-இங்கு ஆதிசத்தியை உணர்த்துவது. ஆதிசத்தியே படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல் ஆகிய தொழில்களைச் செய்வது; உலகுகளைப் படைத்துக் காத்து ஒடுக்கும் சிவகரணமாய் இருப்பது;

'ஓங்களவின்மை உயர் சிகை கரணம்' என்கிறது சதாசிவ ரூபம் (பா. 130). ''அநாதியே தனக்குச் சுதந்தரமாய் உள்ள சிவகரணம் மேலான சிகை'' என்பது சதாசிவ ரூப உரை.

''யாதொன்று பராதீனம் ஆகாமல் வசீகரணபாவம் உண்டோ அது உன்னத ஸ்தானத்தில் இருக்கிற 'சிகை' என்று சொல்லப் படும்'' என்கிறது பௌஷ்கர த்ரவிட டீகா.

''சிவனில் சுவாதீனம் சிகை'' என்கிறது காமிகாகமம் (அர்ச்சனை விதிப் படலம்). எனவே சுவதந்திரம் (தன்வயம் உடைமை) என்ற அருட்குணமே சிகை.

(iv) கவச மந்திரம்: இச்சா சத்தி; ''வண்ணக் கவசம் வனப்புடை இச்சை'' என்கிறார் திருமூலதேவ நாயனார் (10, 1744). கவசம்-ரட்சை.

''தன்னையும் தானே ரட்சித்திக்கொண்டு அன்னியரையும் ரட்சிக்கும் சத்தியே கவசம்'' என்பர் சிவாக்கிர யோகிகள் (சிவஞான சித்தியார், பா. 1, 59) உரை.

''ரக்ஷிக்கப்பட்டதாயும், இதராளுடைய ரஷணத்திலே சத்திமத்தாயும் இருக்கிற (சத்தி உடையதாயும் இருக்கிற) அந்தப் பிரகாசமான கவசம்போல் எங்கும் வியாபிக்கிற தர்மம் ஆகையால் அந்தப் பெயரினால் 'கவசம்' என்று சொல்லப்படும்'' என்கிறது பௌஷ்கர த்ரவிட டீகா. (பதிபடலம்)

உயிர்களை எல்லாம் ரட்சிக்க விரும்பிய இறைவனது இச்சையே கவசம். காப்பாற்றுதல்-மும்மல பந்தத்தால் வரும் துன்பங்களை விலக்குதல்; பாச நீக்கம் செய்தல்.

''பாசத்தை விட்டுநின் பாதத்தின் கீழேஎன்
நேசத்தை வைக்க நினைகண்டாய்—பாசத்தை
நீக்குமா வல்ல கயிலாயா நீஎன்னைக்
காக்குமாறு இத்தனையே காண்''

என்று நக்கீரதேவ நாயனார் அருளிய பாடலால் (கயிலை பாதி காளத்தி பாதி அந்தாதி, பா. 17) இதனை நாம் அறியலாம். எனவே உயிர்களது பாசத்தைப் போக்கி அவற்றைக் காக்கும் சத்தியே கவசம். உயிர்களது பாசத்தைப் போக்க நினைக்கும் சத்தி இச்சா சத்தி.

(v) நேத்திர மந்திரம்: கிரியா சத்தி; ''பண்ணும் கிரியை பரநேத்திரத்திலே'' என்பது திருமூலர் திருவாக்கு (10, 1844)

''சர்வ சகத்திற்கு மூலமாக இருக்கும் சத்தி நேத்திரம்'' என்கிறார் சிவாக்கிரர் (சிவஞான சித்தியார், 1, 59 உரை). அதாவது மண், நீர், அனல், கால், ஆகாயம் ஆகிய ஐந்து அண்டங்களிலும் உள்ள உலகுகளது தோற்றம், நிலை, ஒடுக்கம் ஆகியவற்றிற்கு மூலகாரணமாக இருக்கும் சத்தி என்கிறார். உலகுகளின் மாட்டு இந்த முத்தொழில்களையும் செய்யும் சத்தி கிரியா சத்தி. இதுவே நேத்திர மந்திரம்.

நேத்திர மந்திரம் இறைவனது முடிவில் ஆற்றலை (அலுப்த சத்தியை) உணர்த்தி நிற்பது.

(vi) அஸ்திர மந்திரம் : அஸ்திரம்-ஆயுதம்; உயிர்களது பாவத்தைப் போக்குவன இறைவன் கையில் ஏந்தியிருக்கும் ஆயுதங்கள். ''எந்த சத்தியால் பாவத்தைப் போக்குகிறதோ அது அஸ்திரம்'' என்கிறது காமிகாகமம் (அர்ச்சனை விதிப்படலம்). எனவே உயிர்களது கன்ம மலத்தைப் போக்கும் பெருமை உடையன அஸ்திரங்கள். ''பெருமை அஸ்திரமே'' என்கிறது சதாசிவரூபம் (பா. 130). சிவாக்கிரர் ''பக்தருடைய அஞ்ஞானங்களை ஹரிக்கிற பிரதாப சத்தியே அஸ்திரம்'' என்கிறார். (சித்தியார் 1, 59 உரை). எனவே உயிர்களது அஞ்ஞானத்தையும் பாவங்களையும் போக்குவன இறைவனும், இறைவியும் தமது பலவேறு வடிவங்களில் ஏந்தி இருக்கும் ஆயுதங்கள்.

எனவே இந்த போற்றித் திருத்தாண்டகத்தை நாம் ஓதுங்கால் சத்தியின் மந்திரத் திருமேனிக்குரிய ஷடங்க மந்திரங்களும், பரையாதி பஞ்ச சத்திகளுக்குரிய மந்திரங்களும் ஓதப்பெறுதல் அறியப்பெறும்.

73. நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்
புலனாய மைந்தனோ(டு) எண்வகையாய்ப் புணர்ந்துநின்றான்
உலகே ழெனத்திசை பத்தெனத்தான் ஒருவனுமே
பலவாகி நின்றவா தோணேக்கம் ஆடாமோ 8, 319

—திருவாசகம், திருத்தோணோக்கம், 5.

(i) இங்கு நிலம், நீர் முதலியன பவர், சர்வர் முதலிய அட்ட மூர்த்தீஸ்வரர்களது சக்திகளை உணர்த்துகின்றன. இச்சக்திகளுக்குரிய மந்திரங்கள் :

| | | | |
|---|---|---|---|
| நிலம் | —பவர்; | ஓம் பவஸ்ய தேவஸ்ய பத்னியை நம: | |
| நீர் | —சர்வர்; | ஓம் சர்வஸ்ய | ,, |
| நெருப்பு | —ருத்ரர்; | ஓம் ருத்ராய | ,, |
| உயிர் | —(காற்று) பீமர்; | ஓம் பீமாய | ,, |

| | |
|---|---|
| விசும்பு —மஹாதேவர்; | ஓம் மகதே தேவஸ்ய பத்னியை நம : |
| நிலா —ஈசானர்; | ஓம் ஈசான ,, |
| பகலோன்—உக்ரர்; | ஓம் உக்ராய ,, |
| மைந்தன் —(ஆன்மா) | ஓம் பசுபதே ,, |

அல்லது

| | |
|---|---|
| நிலம் —வாமை; | ஓம் ஹ்ரீம் வாமாயை நம : |
| நீர் —ஜேஷ்டை; | ஓம் ஹ்ரீம் ஜேஷ்டாயை நம : |
| நெருப்பு —ரௌத்ரி; | ஓம் ஹரீம் ரௌத்ரியை நம : |
| உயிர் —காளி; | ஓம் ஹரீம் காள்யை நம : |
| விசும்பு —கவவிகரணி; | ஓம் ஹரீம் கலவிகரண்யை நம : |
| நிலா —பலவிகரணீ; | ஓம் ஹ்ரீம் பலவிகரண்யை நம : |
| பகலோன்—பலப்ரதமனி; | ஓம் ஹ்ரீம் பலப்ரமதின்யை நம : |
| மைந்தன் —சர்வபூதமனி; | ஓம் ஹ்ரீம் சர்வபூததமன்யை நம: |

என்ற மந்திரங்கள்.

எண்வகையாய்ப் புணர்ந்து நின்றான்—பவர், சர்வர் ஆகிய அட்ட மூர்த்தீஸ்வரர்கள் சத்திகளாக, (வாமாதி சத்திகளாக) அச்சத்தி களோடு கலந்து பிரியாது நின்றான்; இவ்வாறு நிற்பது அசுத்த உலகுகளில் ஐந்தொழில் செய்தற்பொருட்டு. சக்தி வழிபாட்டில் சத்தியைச் சுற்றி உள்ள 5 ஆவரணங்களில் பலவேறு சத்தி வணங்க பெறுவர். மேலே கூறிய வாமாதி சத்திகள் எட்டும் முதல் ஆவரணத்தில் வணங்கப் பெறும் சத்திகள்.

(ii) இனி "எண்வகையாய்ப் புணர்ந்து நின்றாள்" என்றது மேலே காட்டப்பெற்ற முதல் ஆவரண சத்திகளையன்றி இரண்டாவது ஆவரணத்தில் எழுந்தருளியுள்ள எட்டுச் சத்திகளையும் உணர்த்தி நிற்பது. இச்சத்திகளுக்குரிய மந்திரங்களாவன :

| | | | |
|---|---|---|---|
| கிழக்குத் திக்கில் | | — | ஓம் ஹ்ரீம் ப்ராஹ்ம்யை நம : |
| அக்னி | ,, | — | ஓம் ஹ்ரீம் மகேஸ்வர்யை நம : |
| தெற்கு | ,, | — | ஓம் ஹ்ரீம் கௌமார்யை நம : |
| நிருதி | ,, | — | ஓம் ஹ்ரீம் வைஷ்ணவ்யை நம : |
| மேற்குத் | ,, | — | ஓம் ஹ்ரீம் வாராஹ்யை நம : |
| வாயு | ,, | — | ஹ்ரீம் இந்திராண்யை நம : |
| வடக்கு | ,, | — | ஓம் ஹ்ரீம் சாமுண்டியை நம : |
| ஈசான | ,, | — | ஓம் ஹ்ரீம் துர்க்காய நம : |

—பரார்த்த நித்திய பூஜாவிதி, கௌரி பூஜை.

(iii) இனி மூன்றாவது ஆவரணத்திலும் எட்டு சத்திகள் உண்டு. இவர்கள் கணநாதர்கள். இவர்களும் சத்திகளே. 'எண்வகையாய்ப்

புணர்ந்து நின்றான்' என்பது இந்த எட்டுவகைச் சத்திகளையும் உணர்த்தி நிற்பது. இச்சத்தி மந்திரங்கள் :

| | | | |
|---|---|---|---|
| கிழக்கு | — | ஓம் ஹாம் ஸ்ரீம் | விருஷபாய நம : |
| அக்னி | — | ,, | கணபதயே நம : |
| தெற்கு | — | ,, | கந்தாய நம : |
| நிருதி | — | ,, | மகா சாஸ்த்ரே நம : |
| மேற்கு | — | ,, | மந்தாய நம : |
| வாயு | — | ,, | வீரபத்ராய நம : |
| வடக்கு | — | ,, | க்ஷேத்ரபாலாய நம : |
| ஈசானம் | — | ,, | பாஸ்கராய நம : |

—பரார்த்த நித்திய பூஜாவிதி, கௌரி பூசை.

திசை பத்தென நின்றது : நான்காவது ஆவரணத்தில் 10 திசையிலும் உள்ள 10 திக்குப் பாலகர்களது சத்திகளாகவும், ஐந்தாவது ஆவரணத்தில் 10 ஆயுத தேவர்களது சத்திகளாகவும் எழுந்தருளி இருப்பதை உணர்த்தி நிற்பது. இச்சத்திகளுக்குரிய மந்திரங்கள்.

(iv) நான்காவது ஆவரணம் : (திக்குப்பாலக சத்திகள்)

| | | | |
|---|---|---|---|
| கிழக்கு | — | ஓம் ஸ்ரீம் | சசி தேவ்யை நம : |
| அக்னி | — | ,, | ஸ்வாஹா தேவ்யை நம : |
| தெற்கு | — | ,, | காலகண்டீ தேவ்யை நம : |
| நிருதி | — | ,, | ஜாதா தேவ்யை நம : |
| மேற்கு | — | ,, | சுகேசீ தேவ்யை நம : |
| வாயு | — | ,, | பத்ரா தேவ்யை நம : |
| வடக்கு | — | ,, | ஹர்ஷிணீ தேவ்யை நம : |
| ஈசானம் | — | ,, | ஜீவோந்மனீ தேவ்யை நம : |
| ஈசானத்துக்கு வலது பக்கத்தில் | | ,, | ஸாவித்ரியை நம : |
| நிருதிக்கு இடது பக்கத்தில் | | ,, | பூமி தேவ்யை நம : |

(v) ஐந்தாவது ஆவரணம் : (ஆயுத தேவ சத்திகள்)

| | | | |
|---|---|---|---|
| கிழக்கு | — | ஓம் ஹ்ரீம் | வஜ்ராய விலாஸின்யை நம : |
| அக்னி | — | ,, | சத்தியே விஸ்ப்புரிண்யை நம: |
| தெற்கு | — | ,, | தண்டாய யாம்யை நம : |
| நிருதி | — | ,, | கட்காய விமுக்யை நம : |

| | | |
|---|---|---|
| மேற்கு — | ,, | பாசாய விமலாயை நம : |
| வாயு — | ,, | துவஜாய அநின்யை நம : |
| வடக்கு — | ,, | கதாய ச்ரியை நம : |
| ஈசானம் — | ,, | திரிசூலாய சூலின்யை நம : |
| இந்திர திக்கு ஈசான திக்குகளுக்கு நடுவில் | ,, | பத்மாய சுமாவின்யை நம : |
| நிருதிக்கு வருண திக்குகளுக்கு நடுவில் | ,, | சக்ராய சுதிருச்யை நம : |

—பரார்த்த நித்திய பூஜாவிதி, கௌரி பூசை)

பலவாகி நின்றவா—முதலாவது ஆவரணத்தில் வாமாதி 8 சத்திகளும், இரண்டாவது ஆவரணத்தில் பிராமீ முதலிய 8 சத்திகளும், மூன்றாவது ஆவரணத்தில் ரிஷபர் முதலிய 8 கணநாத சத்திகளும், நான்காவது ஆவரணத்தில் சசீ முதலிய 10 திக்கு பாலக சத்திகளும், ஐந்தாவது ஆவரணத்தில் 10 ஆயுத தேவர்களது சத்திகளுமாக 44 சத்திகளாக நிற்பவள் சதாசிவரது சத்தியாகிய மனோன்மனி.

சத்தி வழிபாட்டின்போது இந்த 44 ஆவரண சத்திகளையும் நினைந்து வழிபடவேண்டும் என்பதனை இந்தத் திருவாசகத்தால் நாம் அறிகிறோம்.

74. அம்பரா! அனலா! அனிலமே! புவிநீ!
அம்புவே! இந்துவே! இரவி!
உம்பரால் ஒன்றும் அறிவொணா அணுவாய்!
ஒழிவற நிறைந்தஒண் சுடரே!
மொய்ம்பராய் நலஞ்சொல் முதறிவாளர்
முகத்தலை அகத்தமர்ந்(து) எனக்கே
எம்பிரான் ஆகி ஆண்டநீ மீண்டே
எந்தையும் தாயும் ஆயனையே. —9, 120.

—கருவூர்த்தேவர் திருவிசைப்பா, முகத்தலை, 9.

இதில் இறைவன் அட்டமூர்த்தங்களில் தந்தையாயும், தாயாயும் அதாவது மூர்த்தீசுவரர்களாயும் மூர்த்தீசுவரர்களது சத்திகளாயும் இருப்பதைக் கருவூர்த்தேவர் நமக்கு உணர்த்து கிறார். இம்மூர்த்தீசுவரர், சக்திகள் ஆகியவர்களுக்குரிய மந்திரங்கள் முன்னே வெவ்வேறு இடங்களில் தரப்பட்டன; கீழே ஒருங்கு தரப்படுகின்றன :

| மூர்த்தத்தை உணர்த்தும் பாடற்பகுதி | தந்தை மந்திரம் | | தாய் மந்திரம் |
|---|---|---|---|
| **புவி நீ** | **ஓம்** ஹாம் பவாய தேவாய நம: | | ஓம் ஹாம் வாமாயை நம: |
| **அம்புவே** ,, | சர்வாய | ,, | ,, ஜேஷ்டாயை நம : |
| அனலா ,, | ருத்ராய | ,, | ,, ரௌத்ரியை நம : |
| **அனிலமே** ,, | பீமாய | ,, | ,, காள்யை நம : |
| அம்பரா ,, | மகதே | ,, | ,, கலவிகரண்யை நம : |
| இந்துவே ,, | ஈசான | ,, | ,, பலவிகர்ண்யை நம : |
| இரவி ,, | உக்ராய | ,, | ,, பலப்ரமதின்யை நம: |
| **அணுவாய்** ,, | பசுபதயே | ,, | ,, சர்வபூததமன்யை நம : |

75. **உண்டோர் அதோமுகம் உத்தமம் ஆனது**
**கண்டஇச் சத்தி** சதாசிவ நாயகி
கொண்ட முகம்ஐந்து கூறும் கரங்களும்
ஒன்றிரண் டாகவே மூன்றுநால் ஆனதே —10,1402

76. **நன்மணி** சூலம் கபாலம் கிளியுடன்
**பன்மணி** நாகம் மழுகத்தி பந்தாகும்
**கண்மணி,** தாமரைக் கையில் தமருகம்
பொன்மணி பூண்ஆரம் பூசனை ஆனதே. —10,1403

—திருமந்திரம், 4-ஆம் தந்திரம், நவாக்கரி சக்கரம்
பா.84,85

அதோமுகம்-இங்குக் கீழ் நோக்கிய சகஸ்ரார தாமரையை **உணர்த்தியது.** இதில் இருப்பது சித்சந்திரமண்டலம். **அதில் காணப்பெறுபவள்** சதாசிவ நாயகிகளாகிய மனோன்மணி. இவளுக்குத் திருமுகங்கள் ஐந்து; படைத்தல் காத்தல், ஒடுக்கல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களையும் செய்யும் சக்திகள் ஐந்தும் அவளது ஐந்து திருமுகங்கள். அவள் திருக் கரங்கள் பத்து (1+2+3+4); இந்தப் பத்துத் திருக்கரங்களிலும் அவள் தாங்கும் ஆயுதங்கள் :—நல்ல ஓசை தரும் மணி, மூவிலைச் சூலம், மண்டை ஓடு, கிளி, பல மணிகளைத் தன்னிடத்தே கொண்டநாகம், மழு, கத்தி, பந்து, கண்மணி போன்ற நீலநிற முடைய நீலோற்பலம்; தாமரை போன்ற ஒரு கையில் உடுக்கை ஆகிய பத்துமாம்.

(i) மணி-நாத தத்துவத்தைக் குறிப்பது, நாதத்தத்துவ நாயகியாய் அத்தத்துவத்தை தொழிற்படுத்துபவள் மனோன்மணி

(ii) சூலம்-மூவிலைச் சூலம்; படைத்தல், காத்தல், ஒடுக்குதல் ஆகிய முத்தொழில்களைச் செய்யும் சனனி, ரோதயித்திரி, ஆரணி ஆகிய முச்சத்திகள்; இச்சத்திகளாக நிற்பவள் மனோன்மனி.

''மூவலை ஒருதாள் சூலம் ஏந்துதல்
மூவரும் யான்என மொழிந்தவாறே''

என்பது பட்டினத்தடிகள் அருள்வாக்கு. (திருவொற்றியூர் ஒருபா ஒருபஃது, பா.5, வரிகள் 11,12)

(iii) கபாலம்-பிரம கபாலம்; சர்வ சங்காரம் செய்பவள் மனோன்மணி என்ற குறிப்பு; கபாலத்தில் சிவபோதத்தை ஏற்று, சிவபோதத்தை உயிர்களுக்கு அருள்வதால், சிவஞானத்தை உயிர்களுக்கு அருள்பவள் என்ற குறிப்புமாம்.

(iv) கிளி-அசுத்தமாயை; இதனை அனந்தர் வாயிலாகத் தொழிற்படுத்துபவள் மனோன்மணி.

(v) நாகம்-குண்டலினி; சுத்தமாயைக் குறிப்பது; சுத்த மாயைத் தானே தொழிற்படுத்துபவள் மனோன்மணி.

(vi) மழு-இறைவனது லயத்தானமாக (ஒடுக்கத்தானமாக) இருக்கும் பராசக்தி வடிவம்.

(vii) கத்தி-ஒளிமிகுந்த வாள்; ஞானத்தை உணர்த்துவது. ''ஞானவாள்ஏந்தும் ஐயர் நாதப்பறை அறைமின்'' என்பது திருவாசகம். (8,615; திருப்படையெழுச்சி பா. 1) ஞானமே வினைகளைப் போக்குவது; ஆதலின் மனோன்மணி வாள் ஏந்துதல் அவள் பிறப்பாகிய கொடியின் வேரை அறுப்பவள் என்பதைக் குறிப்பது.

(viii) பந்து-பந்து ஏந்துதல் எல்லா அண்டங்களையும் தாங்குபவள் என்ற குறிப்பு.

(xi) கண்மணி-கண்மணி போன்று நீலநிறங் கொண்ட நீலோற்பலம்; இது சங்கற்பம், விகற்பம் ஆகியவற்றை உடைய மன தத்துவத்தைக் குறிப்பது. மனத்தைத் தொழிற்படுத்துபவள் மனோன்மணி.

(x) தாமரைக்கையில் தமருகம்-செந்தாமரை மலர் போன்ற கைகளில் தாங்கிய உடுக்கை. உடுக்கையினின்றுங் எழும் நாதத்தால் (subtle vibrations) சுத்த மாயா உலகுகளையும், அசுத்த மாயா உலகுகளையும் தோற்றுவிப்பவள் மனோன்மணி என்பதனை உணர்த்தி நிற்பது அவள் கையில் உள்ள உடுக்கை.

ஆயுதங்கள் 'சாங்கம்' என்று சொல்லப்படும்; (ச+அங்கம்= சாங்கம்; அங்கத்தோடு கூடியது). மணி முதலிய பத்து ஆயுதங்களும் மனோன்மனியின் பலவேறு ஆற்றல்கள், சத்திகள்; அவளது

ஆற்றல்களின் மலவேறு கூறுகள் (அம்சம்); அவளது ஆற்றலின் பலவேறு நிலைகளுமாம்.

இந்த இரண்டு திருமந்திரப் பாடல்களும் மனோன்மனியின் வடிவத்தை மனத்தில் தியானித்து வழிபடுவதற்குத் துணை செய்வன; தியான ஸ்லோகங்களாக அமைவன.

77. திரிபுரை சுந்தரி அந்தரி சிந்துரப்
பரிபுரை நாரணி யாம்பல வண்ணத்தி
இருள்புரை ஈசி மனோன்மனி என்ன
வருபல வாய்நிற்கும் மாமது தானே. —10, 1046

78. தானா அமைந்தஅம் முப்புரம் தன்னிடை
தானான மூவுரு ஓருருத் தன்மையள்
தானான பொன் செம்மை வெண்ணிறத்தாள் கல்வி
தானான போகமும் முத்தியும் நல்குமே. —10, 1049

79. தாளணி நூபுரம் செம்பட்டுத் தான்உடை
வாரணி கொங்கை மலர்க்கன்னல் வாளிவில்
ஏரணி அங்குச பாசம் எழில்முடி
காரணி மாமணிக் குண்டலக் காதிக்கே. —10, 1049

80. கொம்பனையாளைக் குவிமுலை மங்கையை
வம்பவிழ் கோதையை வானவர் நாடியைச்
செம்பவ ளத்திரு மேனிச் சிறுமியை
நம்பிஎன் உள்ளே நயந்துவைத் தேனே. —10, 1058

81. தலைவி தடமுலை மேல்நின்ற தையல்
தொலைவில் தவம்செயும் தூய்நெறித் தோகை
கலைபல வென்றிடும் கன்னிஎன் உள்ளம்
நிலைபெற இங்கே நிறைந்துநின் றாளே. —10, 1060

82. அளிஒத்த பெண்பிள்ளை ஆனந்த சுந்தரி
புளிஉறு புன்பழம் போல்உள்ளே நோக்கி
தெளியுறு சித்து சிவகதி காட்டி
ஒளியுற வைத்தென்னை உய்ய உண்டாளே —10, 1064

77. திரிபுரை - திரிபுரங்களுக்குத் தலைவி; புரம்-வீடு; திரிபுரம்-முப்புரம்; மூன்று வீடு; ஜனனி, ரோதயித்ரி, ஆரணி ஆகிய மூன்று சத்திகளைத் தான் இருக்கும் இடமாகக் (உடம்பாக) கொண்டவன் திரிபுரை. இந்த மூன்று சத்திகளும் பராசத்தியின் உட்கருவிகளாக இருப்பவன. இவை உயிர்களது பாசத்தைப்

போக்கும் சத்திகள். இச்சத்திகளைத் தொழிற்படுத்துபவள் மனோன்மனி; பராசத்தி.

சுந்தரி-பேரழகுடைய திருமேனியைக் கொண்ட மனோன்மனி; அந்தரி-ஆகாயத்தில் விளங்குபவள்; ஆகாய மண்டலமாகிய சாந்தியதீதகலா சக்கரத்தில் நிறைந்து நிற்பவள்; பராசத்தி; மனோன்மனி.

சிந்துரப் பரிபுரை-சிந்துரம்-சிவப்பு. பரிபுரை-விரிந்த (பரி-விரிந்த) உலகுகளைப் படைப்பவர் பிரம்மா; அவர் வண்ணமாக நின்று உலகுகளைப் படைப்பவர் மனோன்மனி.

நாரணி-விஷ்ணுவைத் தொழிற்படுத்தும் சத்தி.

ஆம்பல்-இங்குச் செவ்வாம்பல்; ஆம்பல் வண்ணத்தி-செந்நிறம் உடைய அனலின் அதிதெய்வமாகிய உருத்திரர் வண்ணமாய் நின்று, அவரைத் தொழிற்படுத்துபவள் பராசத்தி, மனோன்மனி.

இருள்புரை ஈசி-மறைப்புத் தொழிலைச் செய்யும் திரோதான சத்தியாகிய ஆதிசத்தி; இச்சத்தி மகேஸ்வரரைத் தொழிற் படுத்தும் சத்தியாதலின் ஈசி என்றார், ஈசியைத் தொழிற்படுத்து பவள் மனோன்மனி.

மனோன்மனி-சதாசிவமூர்த்தியின் சத்தி.

வரு பலவாய் நிற்கும்-பிரமன், விஷ்ணு, உருத்திரன், மகேசன், சதாசிவன் என்கிற அதிதெய்வங்களாக அன்றி இவர்கள் ஆணையின் கீழ் உள்ள பலவேறு அதிதெய்வங்களாகவும் நிற்கும்.

மாமாது-எல்லா சத்திகளுக்கும் மேலான பராசத்தி, மனோன் மனி. அம்மையாரை வழிபடும்போது, அவள் அயன், மால், உருத்திரன், மகேசன், சதாசிவன் ஆகிய பஞ்சகாரணேசுவரர்களாக நின்று, படைத்தல் முதலிய ஐந்து தொழில்களையும் செய்து, உயிர்களது பாசக் கட்டுகளைப் போக்கிப் பேரானந்த சிவப்பேறு அருள்பவள் என்பதை மனத்துட்கொண்டு அவளது பெருங் கருணைத் திறத்தை நினைந்து நினைந்து உருகி நிற்கவேண்டும் என்பதை இத்திருமந்திரத்தால் திருமூலதேவர் நமக்கு உணர்த்து கிறார்.

78. அம்முப்புரம் தன்னிடை தானே அமைந்த-ஜனனி, ரோதயித்ரி, ஆரணி ஆகிய மூன்று சத்திகளையே தனது இருப்பிட மாகக் கொண்டவள் மனோன்மனி. தானான மூவுரு-இச்சத்தி களுக்கும் மனோன்மனிக்கும் வேறுபாடில்லை; மனோன்மனி இச்சைப்படி (ஆணைப்படி) இச்சத்திகள் தொழிற்படுபவர்கள்.

ஓரிருத் தன்மையள்-இச்சத்திகள் மூன்றும் தனது உட்கரணங் களாக நிற்கத்தான் அவற்றைச் செலுத்துபவள்.

வெண்ணிறத்தாள்-கலைமகள், சரஸ்வதி,

பொன் நிறத்தாள்-திருமகள், இலக்குமி.

செந்நிறத்தாள்-ரௌத்ரி.

இம்மூன்று கடவுளராக நின்று. கல்வி, உலகபோகம், மூத்தி ஆகிய மூன்றையும் அருள்பவள் மனோன்மனி.

**79.** தாளணி நூபுரம் - திருப்பாதங்களில் அணிந்த சிலம்பு; சிலம்பு அசுத்த உலகுகளுக்குக் காரணமான ஒலிகளை (vibrations) எழுப்புவது.

வாரணி கொங்கை - அம்மையாரது இரு தனங்களும் அபர ஞானம், பரஞானம் ஆகிய இரண்டையும் உணர்த்துவன. திருஞானசம்பந்தப் பிள்ளையாருக்குத் திருமுலைப்பால் கொடுத் தது இந்த இரு ஞானங்களையும் அருளியதை உணர்த்துவதேயாம்.

'மலர்க்கன்னல் வாளி வில்' என்பதனை 'மலர்வாளி; கன்னல் வில்;' என்று மாற்றிப் பொருள்கொள்க.

மலர்வாளி—ஐந்து மலர்களாகிய அம்புகள். சப்தம் (ஓசை), பரிசம் (ஊறு), ரூபம் (ஒளி), ரசம் (சுவை), கந்தம் (நாற்றம்) என்ற ஐந்து தன்மாத்திரைகளே புஷ்ப பாணங்கள் என்பர்.

உல்லாத் தத்துவங்களையும் அதிதெய்வங்களைக் கொண்டு தொழிற்படுத்துபவள் மனோன்மனி. ஐந்து தன்மாத்திரைகளுக்கும் ஆதாரமாக உள்ள அதிதெய்வங்கள் முறையே சதாசிவர், மகேசு வரர், உருத்திரர், திருமால், அயன் ஆகிய ஐவருமாம். இந்த ஐவரையும் தொழிற்படுத்தி உயிர்களது பாசத்தைப் போக்குபவள் மனோன்மனி என்பதனையே அவள் ஐந்து மலர் வாளிகள் காட்டுகின்றன. கன்னல்-கரும்பு. கரும்புவில்-மணம் என்பர்.

கன்னல் வில்: அம்மையார் தமது திருக்கரத்தல் ஏந்தும் கரும்பு வில் ஓங்காரம். ஓங்காரம் அகாரம், உகாரம், மகாரம், விந்து, நாதம் என்ற ஐந்து கூறுகளாகப் பிரிக்கப்பட்டு அவை பஞ்ச ஓங்காரக் கலைகள் என்று சொல்லப்பெறுவன. இந்த ஐந்து கலை களுக்கும் உரிய அதிதெய்வங்கள் சதாசிவர், மகேசுவரர் முதலிய ஐந்து காரணேசுவரர்கள். இவர்களைச் செயற்படுத்தும் சிவசத்தியே சமஷ்டி ரூபமாகிய ஓங்காரம்.

ஓங்காரமே வில் என்பதனை முண்டகோபநிடதம் கூறுகின்றது. அது ''பிரணவமே வில்; ஆன்மாவே அம்பு; லட்சியப் பொருளே (குறியே) அந்தப் பிரமம் (சிவம்); கவனக் குறைவின்றி எய்க'' என்பது அந்த உபநிடத வாக்கு.

அதர்வ சிரோப நிடதம் ''இந்த அக்ஷரமே (பிரணவமே) காணப்படும் பிரபஞ்சம் எல்லாம்; ஜகத்துக்கு ஹிதமாய் உள்ளது; பிரஜாபதியைச் சார்ந்தது; ஸர்வதேவ சாரபூதமாய் உள்ளது; சோமன் என்ற உமாநாதனைத் தேவதையாக உடையது'' என்கிறது.

மேலும் இந்த உபநிடதம் ''இந்த க்ஷரம் பரப்பிரம்ம சொரூபம்'' என்கிறது. பரப்பிரமம்-சிவம்; சொரூபம்-வடிவு.

கரும்ப வில்லையும் மலர் அம்புகளையும் திருக்கைகளில் தரித்திருப்பவள் ராஜராஜேச்வரி. ''ஓம் ராஜராஜேச்வர்யை நம:'' என்பது லலிதா சகஸ்ரநாமங்களில் ஒன்று. 'பிரமன், விஷ்ணு, உருத்திரர், மகேசுவரர், சதாசிவர் ஆகிய மண்டல அரசர்களை ஆளுகின்ற (ஈச்-ஆளுதல்) சிவசத்தியாகிற ராஜ ராஜேச்வரிக்கு வணக்கம் என்பது இதன் பொருள்.

அங்குசம் : உயிர்களது பாசத்தைப் போக்கும் சக்தி. ஞான சத்தி வடிவாக உள்ளது.

பாசம் : ஞானேந்திரியங்கள் 5, கன்மேந்திரியங்கள் 5, தன்மாத்திரைகள் 5, தூலபூதங்கள் 5 ஆகிய தத்துவங்களுக்குக் காரணமான அசுத்த மாயா ரூபம் பாசம்.

அசுத்த மாயா தத்துவங்களோடு உயிர்களைச் சேர்த்து அவற்றைப் பிறப்பு இறப்புகளிற் செலுத்தும் சத்தியே பாசம். இவ்வாறு பிறப்பு இறப்புகளிற் செலுத்துதல் மூலமாக அம்பாள் உயிர்களது அறியாமையைப் போக்கி, சிவஞானம் பெறச் செய்து, முடிவில் மும்மல நீக்கம் செய்கிறாள்.

80. கொம்பு-மரக்கொம்பு; கொம்பனையாள்-உயிர்களாகிய கொடிகள் தாவிப் படர ஆதாரமாக இருப்பவள்.

''தாவிப்படரக் கொழுகொம்பில்லாத தனிக்கொடிபோல்
பாவித்தனிமனம் தள்ளாடி வாடிப் பதைக்கின்றதே''

என்பது அருணகிரிநாதர் அருள்வாக்கு (கந்தர் அலங்காரம், 99)

குவிமுலை மங்கை-அபரஞான பரஞானங்களை உயிர்களுக்கு அருள்பவள்; ஞானசத்தி.

லம்புஅவிழ் கோதை-மணம் பொருந்திய கூந்தல்; சடை; ஆதிசத்தி.

வானவர் நாடி-வானவர்களால் விரும்பப்பட்டவள்! வானவர்கள் விரும்பி வழிபடும்படி பெருங்கருணை உடையவள்; இச்சா சத்தி.

சிறுமி-பாலாம்பிகை, புனர் உற்பவ காலத்தில் உயிர்களுக்கு உடம்புகளைப் படைத்துக் கொடுப்பவள்; கிரியா சத்தி.

என்னுள்ளே-எனது இதயமாகிற தாமரையில்.

நயந்து வைத்தேன்-பேரன்புடன் வைத்து தியானித்து நிட்டை கூடி நின்றேன்.

81, தலைவி-அயன், மால், உருத்திரர், மகேசுவரர், சதாசிவர் ஆகிய பஞ்சகாரணேசுவரர்களுக்கும் தலைவி.

தடமுலை மேல் நின்ற தையல்-ஞானமே வடிவானவள்; அபரஞான பரஞானங்களை உயிர்களுக்கு அருளி, அவற்றை உய்யச் செய்பவள்.

தவம் செய்தல்-தலைவியாகவும், ஞான சொரூபமாகவும், ஆனந்த வடிவமாகவும் உள்ள அவள் தவம் செய்தல் தன்பொருட்டன்று; உயிர்களுக்கு வழிகாட்ட. அம்மையார் காஞ்சிபுரம், திருவானைக்கா முதலிய தலங்களில் சிவலிங்கம் நிருவி வழிபட்டது உயிர்களுக்குத் தவ நெறியை உணர்த்துதற் பொருட்டேயாம்

தூய்நெறித் தோகை-தூய்மை அடைய (பாச நீக்கம் பெற) உயிர்கள் பின்பற்றவேண்டிய நெறிகளை உணர்த்தும் மயில் (தோகை-மயில்). மயிலாப்பூரில் அம்மையார் மயில் வடிவில் கபாலீசுவரரை வழிபட்டது. உயிர்களுக்குச் சாயை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நெறிகளை உணர்த்துதற் பொருட்டேயாம்.

கலைபல வென்றிடும் கன்னி-பிரணவ கலைகள், பிராசாத கலைகள் ஆகிய கலைகளது அதிதெய்வங்களைத் தொழிற்படுத்தும் சத்தி.

உள்ளம்-உயிர்; என் உள்ளம் நிலைபெற நிறைந்து நிற்றல்-என் உயிரினுள்ளே உயிர்க்குயிராய் நின்று, எனக்கு வியாபக அறிவைத் தந்து, தன்து பரிபூரண வியாபக அறிவில் என்னை அடங்கி நிற்குமாறு செய்தல்.

82. அளி-அன்பு; கருணை; அளிஒத்த பெண்பிள்ளை-கருணையில் தன்னைத்தானே ஒத்தவள்; கருணையில் தன்னை ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவள்; கருணையே உருவானவள்,

ஆனந்தசுந்தரி-ஆனந்தமே அவள் அழகு; எல்லா உயிர்களுக்கும் பேரானந்த முத்தி நிலையை அருள்வது அவளது பெருங் கருணையை உணர்த்துவது; இப் பெருங் கருணையே அவள் அழகு.

புளிஉறுபுன்பழம்போல் உள்ளே நோக்கி-பழுத்த புளியம்பழம் எவ்வாறு வெளித் தோலோடு சேராது தனித்து நிற்குமோ, அதுபோன்று மாயா காரிய உடம்போடு பற்றுதல் கொள்ளாது, சிவத்தைப் பற்றி நிற்கும்படி எனக்கு அருள் நோக்கம் செய்து.

தெளியுறுவித்து-சிவஞானத்தை அருளி;

சிவகதி காட்டி-சிவப்பேறு ஆகிய பேரானந்தத்தில் என்னை அழுத்தி. ஒளியுறவைத்து-ஞான வடிவமாய், (சிவமேயாய்)த் திகழும்படி செய்து. என்னை உய்ய உண்டாள்-யான் உய்யும்படி. 'யான்', 'எனது' என்ற எனது அகப்பற்று, புறப்பற்றுகளை நீக்கி, என்னோடு இரண்டறக் கலந்து, ஞாதுரு, ஞானம், ஞேயம் (காண்பான், காட்சி, காட்சிப்பொருள்) என்ற திரிபுடி நிலையை (வேறுபட்ட நிலையை) நீக்கி, என்னை அவளது பேரானந்தப் பெருங்கடலுள் அழுத்தினாள்; என்னே அவள் கருணை இருந்தவாறு!

இத்திருமந்திரம் திருமூலதேவர் தாம் சத்தியை வழிபட்டதால் பெற்ற பேரானந்த அனுபவத்தை நமக்கு உணர்த்துவது.

> ''யானாகிய என்னை விழுங்கி வெறும்
> தானாய் நிலை நின்றது தற்பரமே''

என அருணகிரியாரும் முருகப்பெருமான் தம்மை 'உய்ய உண்ட' அனுபவத்தை நமக்கு எடுத்துக் காட்டுகிறார். (கந்தரனுபூதி, 28)

**83.** அருளே உலகெலாம் ஆள்விப்பது(து) ஈசன்
அருளே பிறப்பறுப்ப தானால்—அருளாலே
மெய்ப்பொருளை நோக்கும் விதியுடையேன் எஞ்ஞான்றும்
எப்பொருளும் ஆவது எனக்கு. —11, 4, 9

—காரைக்கால் அம்மையார் அற்புதத் திருவந்தாதி-9.

அருள்-சிவசத்தி; உலகெலாம் ஆள்விப்பது-சிவசத்தியின் பலவேறு கூறுகளே அயன், மால், உருத்திரன், மகேசன் என்ற காரணேசுவரர்களாக நின்று மண், நீர், அனல், கால் ஆகிய அண்டங்களில் உள்ள உயிர்களை ஆள்விப்பது; அருளே பிறப்பறுப்பது-சிவசத்தியின் பலவேறு கூறுகளே உயிர்களது பிறப் பிறப்புகளுக்குக் காரணமான பாசக் கட்டுகளை வேரொடு அறுப்பது.

மெய்ப்பொருள்-சத்துப்பொருள் ஆகிய சிவம்; அப்பொருளை நோக்குதல்-அப்பொருளை அடைந்து, கண்டு, ஆனந்தத்து அழுந்தி நிற்றல். இவ்வாறு சிவத்தைக் கண்டு, ஆனந்தத்து அழுந்துமாறு செய்வது அருளாகிற சிவசத்தி. எஞ்ஞான்றும் எப்பொருளும் ஆவது எனக்கு- இவ்வாறு சத்தியின் அருளால் நான் சிவத்தைக் கண்டு நிற்பேனாகில், அதனையே எப்போதும் நான் காண்பேன்; எல்லாப் பொருள்களிலும் சிவத்தையே காண்பேன்; பாதார்த்தங்கள் பாரேன்; சிவமே பார்த்திருப்பேன்.

எனவே பாசநீக்கம், சிவப்பேறு (சிவானந்த அனுபவம்) ஆகிய இரண்டையும் பக்குவம் பெற்ற உயிர்களுக்கு அருள்வது இறைவன் திருவருளாகிய சத்தியோம்.

84. சார்ந்தாரை எவ்விடத்தும் காப்பனவும், சார்ந்(து) அன்பு
கூர்ந்தார்க்கு முத்தி கொடுப்பனவும்—கூர்ந்(து) உள்ளே
மூளத் தியானிப்பார் முன்வந்து நிற்பனவும்!
காளத்தி யார்தம் கழல். —11, 9, 60.

—நக்கீரதேவர், கயிலை பாதி காளத்தி பாதி அந்தாதி, 60.

சார்ந்தார்-இறைவன் திருவருளைப் (கழலைப்) பற்றி நிற்பவர்; நகார மகாரச் சார்புகளை விட்டு நீங்கி, வகாரமாகிய திருவருளைப் பற்றி நிற்பவர்; இவ்வாறு நிற்பவர்களைப் பாசம் எக்காலும் எவ்விடத்தும் வந்து தாக்காதவாறு செய்வது அத்திருவருள் (கழல்); முத்தி-பேரானந்த அனுபவம்; சிவானந்தானுபூதி; இவ்வாறு திருவருளைப் பற்றி நிற்பவர்களுக்குப் பேரானந்த அனுபவத்தைத் தருவதும் சத்தியாகிற திருவருளே. உள்ளே-இதய தாமரையில், மூளுதல்-பற்றுதல்; கூடுதல்.

மூளத்தியானித்தல்-இறைவன் திருவடியாகிய சத்தியை அகத்தே தியானித்து, அதனைக் கூடி நிற்கும் நிலையாகிய நிட்டையில் நிற்றல். இது தூய அருள்நிலை என்று சொல்லப் பெறும், இந்நிலையில் உயிர் நகார மகாரப் புற்றுகளை விட்டு நீங்கி, வகாரமாகிய சிவசத்தியைப் (திருவருளைப்) பற்றி நிற்கும்.

முன்வந்து நிற்றல்-தன்னைக் காட்டி நிற்றல். இந்த நிலையில் உயிர் 'அவன் அருளே கண்ணாகக்' கண்டு நிற்கும்.

எனவே இறைவனது திருவருளாகிற சத்தியே பாசத்து அழுந்தாது நம்மைக் காப்பது; அன்புடன் அத்திருவருளைச் சார்ந்து நிற்கும் பக்குவ உயிர்களுக்குப் பேரானந்தப் பெருவாழ்வாகிய முத்தியை அருள்வது; அகத்தே தியானித்து நிட்டை கூடி நிற்கும்போது தன்னையும் சிவனையும் காட்டி நிற்பது.

முன்வந்து நிற்பன-காளத்தியார், அவர் கழல் ஆகிய இரண்டு மாம். 'சி'கார 'வ'காரங்களாகிய இரண்டுமே காட்சியுறுவன.

வகாரக் காட்சி-பரை தரிசனம்; சிகாரக் காட்சி-சிவ தரிசனம். முதற்கண் நிகழ்வது பரை தரிசனம்; இதன்பின்னர் நிகழ்வது சிவ தரிசனம். இந்த இரு தரிசனங்களையும் தருவது இறைவன் திருவருளாகிய சிவசத்தி.

85. இறவாத இன்ப அன்பு வேண்டிப்பின் வேண்டுகின்றார்
''பிறவாமை வேண்டும்; மீண்டும் பிறப்புண்டேல் உன்னை என்றும்
மறவாமை வேண்டும்; இன்றும் வேண்டுநான் மகிழ்ந்து பாடி
அறவா நீ ஆடும்போது(து) உன் அடியின்கீழ் இருக்க''
என்றார். —11, 24, 80

—காரைக்கால் அம்மையார் புராணம், பா. 60

இறவாத இன்பம்-என்றும் நீங்காத திருவடி இன்பம்; திருவருள் இன்பம்; திருவருளேயாகிய சத்தியின் இன்பம்; பேரின்பமே குணமாய சத்தியின் இன்பம்.

இறவாத அன்பு-(இறவாத என்பதனை 'இன்பம் அன்பு' என்ற இரண்டோடும் கூட்டுக) திருவடி இன்பத்துக்கு வாயிலாகிய அயரா அன்பு. அயரா அன்பே என்றும் நீங்காத பேரின்பத்துக்குக் காரண மாக இருப்பது. உள்ளம் உருகும் அன்பில்லை எனில் சிவத்தோடும் அவன் திருவருளோடும் உடனாக நிற்கும் பேரின்ப நிலை இல்லை. ''உள்ளம் உருகில் உடனாவர்'' என்பது ஆளுடைய பிள்ளையார் அருள்வாக்கு. ''அன்பினால் இன்பம் ஆர்வர்'' என்பது சேக்கிழார் சுவாமிகள் அருள்வாக்கு.

பிறவாமை வேண்டும் - பிறவாமையே வேண்டத்தக்கது. ''அவிநாசியே! என்கோனே! உனை வேண்டிக்கொள்வேன் பிறவாமையே'' என்ற ஆளுடை நம்பிகள் அருள்வாக்குக் காண்க.

மறவாமை-இறைவன் திருவருளாகிய (சிவசக்தியாகிய) திருவடியை என்றும் பற்றி நிற்றல். ''புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன்னடி என் மனத்தே, வழுவாதிருக்க வரம்தர வேண்டும்'' என்பது ஆளுடை அரசுகள் அருள்வாக்கு. நகார மகாரச் சார்புகளை விட்டு நீங்கி, என்றும் சிகார வகாரங்களைப் பற்றி நிற்கும் நிலையே மறவாமை; இதுவே தூய அருள்நிலை; சிவயோக நிலை.

அடி-'சிவானந்தானுபூதியாகிற திருவடி' என்பர் சிவஞான சுவாமிகள். ஆடும்போது உன் திருவடியின்கீழ் இருக்க—நடேசப்

பெருமானது தூக்கிய திருவடியே முத்தி தரும் தாள். இதனைக் காட்டி நிற்பது திருவருள்; சிவசத்தி; வகாரம்; வீசிய இடது திருக்கரம். நடேசப் பெருமான் அபய திருக்கரத்தில் இருப்பது யகாரமாகிய உயிர். அதற்கு முத்தி தரும் தாளைக் காட்டி நிற்பது வீசிய திருக்கரம்; அடியின்கீழ் இருத்தல்—தூக்கிய திருவடி நிழலில் சிவானந்தம் பெற்று நிற்றல்; சிவனது ஆனந்தத்தில் அழுந்தி நிற்றல். இதனைச் செய்வது திருவருளாகிய சிவசத்தி.

## 23. இச்சா ஞான கிரியா சத்திகள் வணக்கம்

சில சிவாலயங்களில் அம்பாளது கர்ப்பக்கிரகச் சுவரின் வெளியே உள்ள கோட்டங்களில் இச்சா சத்தி, ஞான சத்தி, கிரியா சத்தி ஆகிய மூன்று சத்திகளும் எழுந்தருளி இருப்பர். வேறு சில ஆலயங்களில் துர்க்கை, வைஷ்ணவி, பிராமி ஆகிய சத்திகள் காணப்பெறும். இவர்களுக்குரிய திருமுறைப் பாடல்கள் :

## 23-1. இச்சா சத்தி வணக்கம்

86. அத்தாஉன் அடியேனை அன்பால் ஆர்த்தாய்;
    அருள்நோக்கில் தீர்த்தநீர் ஆட்டிக் கொண்டாய்;
எத்தனையும் அரியைநீ எளியை ஆனாய்;
    எனைஆண்டு கொண்டிரங்கி என்று கொண்டாய்;
பித்தனேன், பேதையேன், பேயேன், நாயேன்
    பழைத்தனகள் அத்தனையும் பொறுத்தாய் அன்றே;
இத்தனையும் எம்பரமோ? ஐய ஐயோ!
    எம்பெருமான் திருக்கருணை இருந்தவாறே.

—6, 95, 8, தனித் திருத்தாண்டகம், பா. 8

எம்பெருமான் திருக்கருணை—இச்சா சத்தி; பாசக் கட்டுகளால் துன்பக் கடலுள் ஆழ்ந்து கிடக்கும் உயிர்களுக்குப் பாச நீக்கம் நல்கி அவற்றை இன்பக்கரையேற்ற நினைக்கும் இறைவனது பெருங்கருணையே இச்சா சத்தி. உயிர்களுக்குப் பாச நீக்கம் செய்வது படைத்தல், காத்தல், ஒடுக்குதல் ஆகிய தொழில்களால் ஆதலால் இத்தொழிலைச் செய்யக் கருதியது இச்சாசத்தி.

சிவசத்தியானது பராசத்தி, ஆதிசத்தி, இச்சாசத்தி, ஞான சத்தி என்று ஐந்து நிலைகளில் வைத்து எண்ணப்பெறுவது. பிறந்து வினைப்பயன்களைப் புசித்து அல்லாமல் உயிர்கள் பாச நீக்கமும் சிவம்பேறும் பெறா; இவ்வாறுள்ள உயிர்களுக்குச் சிவப்பேறு அளிப்போம் என்று கருதிய சத்தி பராசத்தி. ஆணவ மலத்தைச் செலுத்தி உயிரினது வியாபக அறிவை மறைக்கும்படி

செய்வது ஆதிசத்தி. இதுவே திரோதான சத்தி அல்லது மறைத்தல் சத்தி என்று சொல்லப்பெறுவது. உயிர்கள் பாசநீக்கம் பெறப் படைத்தல், காத்தல், ஒடுக்குதல் ஆகிய தொழில்களை இச்சித்தது இச்சாசத்தி; எல்லா உயிர்களும் செய்த நல்வினைகளை தீவினை களை அறிந்து அவற்றுக்கு ஒப்ப. புண்ணிய பாவ பலன்களை அவ்வுயிர்கள் அனுபவிக்குமாறு அவற்றிற்கு இன்ன இன்ன உடல் (தனு), கருவிகள் (கரணம்), உலகுகள் (புவனங்கள்), நுகர்ச்சிப் பொருள்கள் (போகம்) ஆகியவற்றை நல்கவேண்டும் என்பதனை அறிவது ஞானசத்தி. உடல் கருவிகள், உலகுகள், நுகர்ச்சிப் பொருள்கள் ஆகியவற்றைப் படைத்துக் காத்து ஒடுக்குவது கிரியா சத்தி. (சிவநெறிப் பிரகாசம் பா. 71; சிவஞான சித்தியார், சூத்திரம் 1, பா. 63, சிவாக்கிர யோகிகள் உரை.)

ஆதிசத்தி பராசத்தியின் ஆற்றலில் ஆயிரத்தில் ஒரு கூறு கொண்டது; இச்சாசத்தி ஆதிசத்தியின் ஆயிரத்தில் ஒரு கூறு; ஞானசத்தி இச்சாசத்தியில் ஆயிரத்தில் ஒரு கூறு; கிரியாசத்தி ஞானசத்தியின் ஆயிரத்தில் ஒரு கூறு. (வாதுளாகமம்; சதாசிவ ரூபம் பா. 2) இச்சத்திகள் ஐந்தும் சிவசத்தியின் பலவேறு கூறுகள் (அம்சங்கள்); எல்லாவற்றிற்கும் மேலாய சிவசத்தி கீழே இறங்கி வந்து பலவேறு தணிந்த ஆற்றல்களுடன் தொழிற்படும் பலவாறு நிலைகள்.

அன்பால் ஆர்த்தல்—பெருங் கருணையாகிற இச்சாசத்தி சிறிது சிறிதாக உயிர்கள் மாட்டு அன்பு வளரச் செய்து, பின்னர் அவ்வன்பால் அந்த உயிர்களை இறைவன் திருவருளிடம் பிணிப் புறச் செய்தல்.

அருள்நோக்கு—கருணை நோக்கு (கடாட்சம்); உயிர்களுக்குப் பாசநீக்கம் அருளவேண்டும் என்று இச்சித்தது. இது இச்சா சத்தியின் தொழில்.

தீர்த்தம் -திருவருள்; நீர்த்த நீர் ஆட்டிக்கொள்ளுதல்; உயிர் களைத் திருவருளில் தோயுமாறு செய்தல்; உயிர்களை இவ்வாறு தோய்தல் பாசக்கட்டுகள் நீங்கினாலன்றி நிகழாது. எனவே உயிர் நகார மகரரச் சார்புகளை விட்டு, சிகார வகாரங்களைப் பற்றி நிற்கச் செய்வதே தீர்த்தநீர் ஆட்டுதல்.

எதனையும் அரியை நீ-சிவசத்தியாய் மாபெரும் ஆற்றல் படைத்த நீ. எளியை ஆனாய்-உயிர்கள் தாங்கும்படி உனது ஆற்றலை மிகவும் குறைத்து ஒரு மிகச் சிறு கூறாய் கீழே இறங்கி வந்து உயிர்கள் மாட்டுப் பொருந்தினாய்,

ஆட்கொள்ளுதல்-உயிர்களை இறைபணி நிற்கச் செய்தல்; உயிர்களது இச்சை, அறிவு, செயல் ஆகிய மூன்றும் சிவசத்தியின் இச்சை, அறிவு, செயல்களாகத் திகழும்படி செய்தல்.

இரங்குதல்-இச்சா சத்தியின் கருணையை உணர்த்தியது.

ஏன்று கொள்ளுதல்-உயிர்களைத் தனது பணி ஆட்களாக ஏற்றுக்கொள்ளுதல்.

பித்தன்-உய்யும் நெறியில் நிற்காதவன்; பேதை-உய்யும் நெறிகளை (சரியை, கிரியை, யோக, ஞானங்களை) உணராதவன்; பேயன்-வீணாக உலக இன்பங்களுக்காக உழைப்பவன்;

நாயேன்-நாய் போன்று பல இழிந்த குணங்களை உடையவன்.

பிழைத்தனங்கள் அத்தனையும் பொறுத்தல்-இவ்வாறு உய்யு நெறிகளை அறியாது, அவற்றில் நிற்காது, வீணுக்கு உழைத்து, சால நாள் போக்கும் இழியர்களது பிழைகளைக் கருதாது அவற்றைத் தனது பெருங்கருணையால் பொறுப்பவள் இச்சாசத்தி.

இத்தனையும் எம்பரமோ?-இவ்வாறு அன்பால் ஆர்த்தல், அருளால் நோக்குதல், தீர்த்தநீர் ஆட்டுதல், எளியை ஆதல், ஆட்கொள்ளல், இரங்கி ஏன்றுகொளல், இழிய உயிர்கள் செய்த பிழை எலாம் பொறுத்தல் ஆகிய இத்தனையும் இவ்விழிய உயிர்களது செயல்களுக்கு (பரம்-செயல்) ஒத்தனவோ?

எம்பெருமான் திருக்கருணை இருந்தவாறே-என்னே எம்பெருமான் திருக்கருணையாகிற இச்சா சத்தியின் பெருங் கருணைத் திறம்!

## 23-2. ஞானசத்தி வணக்கம்

87. எல்லா உலகமும் ஆனாய் நீயே
ஏகம்பம் மேவி இருந்தாய் நீயே
நல்லாரை நன்மை அறிவாய் நீயே
ஞானச்சுடர் விளக்காய் நின்றாய் நீயே
பொல்லா வினைகள் அறுப்பாய் நீயே
புகழ்ச் சேவடி என்மேல் வைத்தாய் நீயே
செல்வாய செல்வம் தருவாய் நீயே
திருவையறகலாத செம்பொற் சோதீ —6, 38, 7

ஞானச்சுடர் விளக்கு-ஞானசத்தி.

எல்லா உலகமும் ஆதல்-எல்லா அண்டங்களிலும் உள்ள எல்லா உலகுகளிலும், எல்லா உலகுகளிலும் உள்ள எல்லா உயிர்

களிலும் நிறைந்து நிற்றல்; இவ்வாறு நிற்றல் வியாபக அறிவால்; இந்த வியாபக அறிவை உடையது ஞானசத்தி. இந்த வியாபக அறிவால், எல்லா உயிர்களது நல்வினை தீவினைகளையும், அவற்றுக்குரிய பலன்களையும், அவற்றுக்குத் தக்கவாறு உயிர் களுக்குக் கொடுக்கவேண்டிய தனு, கரண, புவன, போகங்களை யும் அறிவது ஞானசத்தி.

நல்லாரை நன்மை அறிதல்-நல்லோர் செய்யும் நல்வினைகளை அறிதல்; இதனால் தீயோர் செய்யும் தீவினைகளை அறிதலும் குறிப்பால் உணர்த்தப்பெற்றது.

ஞானச்சுடர் விளக்காய் நிற்றல்-ஞான சத்தியாய் விளங்குதல்.

பொல்லா வினைகள் அறுத்தல்-தீவினைகளைச்செய்வோர்க் குத் துன்பங்களைத் தந்து அனுபவத்தால் அறிவு வளரச் செய்தல்; அறிவு (சிவஞானம்) அருளி வினைகளை நீக்குதல்.

சேவடி என்மேல் வைத்தல்-ஞான தீட்சை செய்தல்.

செல்வாய செல்வம்-உயிர்களைத் திருவருளில் செலுத்தும் செல்வம்; அன்பு; உயிர்களுக்கு இந்த அன்பினைத் தரும் (அன்பு வளரச் செய்யும்) சத்தி, ஞானசத்தி.

செம்பொற்சோதீ : சோதி-இறைவன்; செம்பொற்சோதி- திருவையாற்றுத் தல இறைவர் திருநாமம். இந்தச் சோதியீ சோதியினின்றும் எழும் சுடர் (கிரணங்கள்) ஞானசத்தி.

## 23-3. கிரியாசத்தி வணக்கம்

88. இருநிலனாய்த் தீயாகி நீரும்ஆகி
இயமானனாய் எறியும் காற்றும் ஆகி
அருநிலைய திங்களாய் ஞாயிறாகி
ஆகாசமாய் அட்ட மூர்த்தி ஆகி
பெருநிலமும் குற்றமும் பெண்ணும் ஆணும்
பிறர்உருவும் தம்உருவும் தாமேஆகி
நெருநலையாய் இன்றாகி நாளை ஆகி
நிமிர்புன் சடைஅடிகள் நின்றவாறே. —6, 94, 1
—நின்ற திருத்தாண்டகம், 1)

இருநிலன்-பெரிய பூமி; இங்கு மண் அண்ட (நிவிர்த்தி கலாசக்கர) உலகுகளை உணர்த்தி நின்றது; நீர்-நீர் அண்ட (பிரதிட்டா கலாசக்கர) உலகுகள்; தீ-நெருப்பு அண்ட (வித்தியா கலாசக்கர) உலகுகள்; காற்று-காற்று அண்ட (சாந்தி கலாசக்கர,

உலகுகள்; ஆகாசம்-ஆகாச அண்ட (சாந்தியதீத கலாசக்கர) உலகுகள். திங்கள், ஞாயிறு-சந்திர சூரிய மண்டலங்கள். இவை எல்லாம்ஆதல்-இந்த ஏழு அண்ட உலகுகளை படைத்து அவற்றுள் ஒன்றாய்க் கலந்து நிறைந்து நின்று, அவற்றை நிலைக்கச் செய்து நிற்றல். இயமானன்-உயிர்கள். இயமானன் ஆதல்-இவ்வுலகுகளில் உள்ள உயிர்களுள் ஒன்றாய்; உயிர்க்குயிராய்க் கலந்து நிற்றல். இந்த அண்டங்களில் உள்ள உலகுகளையும் உலகுகளில் உள்ள உயிர்களுக்கு தனு கரண போகங்களையும் படைத்து, அவற்றில் ஒன்றாகக் கலந்து நின்று, நிலைபெறச் செய்தும், இயங்கியும் வருவது கிரியாசத்தி. இந்த எட்டும் கிரியாசத்தியின் தூல வடிவுகள்; அட்ட மூர்த்தங்கள்.

நிலம், நீர், தீ. காற்று, ஆகாயம் ஆகிய ஐந்தும்-பஞ்ச பூதங்கள். அவற்றுக்குக் காரணமான பஞ்ச தன்மாத்திரைகள், ஐந்து கன்மேந்திரியங்கள், ஐந்து ஞானேந்திரியங்கள், இவற்றுக்குக் காரணமான மனம்; அகங்காரம் ஆகிய தத்துவங்களையும் உணர்த்தி நிற்பன. பெருநலம்-புத்திய தத்துவத்தின் தர்மம். ஞானம், வைராக்கியம், ஐஸ்வரியம் ஆகிய குணங்கள்; குற்றம்-புத்தி தத்துவத்தின் அதர்மம், அஞ்ஞானம், அவைராக்கியம், அவைஸ்வரியம் ஆகிய கெட்ட குணங்கள். எனவே 'பெருநலமும் குற்றமும்' என்றது புத்தி தத்துவத்தை உணர்த்தி நிற்பது.

பெண் ஆண்-பலவேறு உயிர்களது ஆண், பெண் ஆகிய இருவகைப்பட்ட உடல்கள் (தனு) பிறர்உரு-ஏனைய அதிதெய்வங்களின் வடிவங்கள்.

தம்உரு-அவ்வதிதெய்வங்களின் வடிவங்களை எல்லாம் தனது தூல வடிவமாகக்கொண்டு திகழ்வது கிரியா சத்தி.

நெருநலை, இன்று, நாளை - காலதத்துவம். இதனால் மாயா தத்துவங்கள் எல்லாம் உணர்த்தப்பெறுகின்றன. அசுத்த மாயா தத்துவங்களை அனந்தேசர் முதலிய பலவேறு அதிதெய்வங்கள் வாயிலாகத் தொழிற்படுத்துவது கிரியாசத்தி. நிமிர்சடை-நெருங்கிய சடை; சடை-ஆதி சத்தியைக் குறிப்பது. ஆதிசத்தியின் ஆற்றலில் ஒரு சிறு கூறு ஆற்றல் உடையது கிரியா சத்தி.

புன்சடை-ஆதிசத்தி மறைத்தல் தொழிலைச் செய்வதால் அது இழிவுடையதாயிற்று (புன்மை-இழிவு)

இத் திருத்தாண்டகத்தில் கிரியா சத்தி போற்றப்படுதல் காணப்பெறும்.

இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி ஆகிய மூன்று சத்திகளும் அம்பாள் (மகேச்வரி) கர்ப்பக்கிரகத்துச் சுவரில் (வெளியே) இரண்டாவது ஆவரண தேவதைகளாக வழிபடப்பெறுவர்.

சில சிவாலயங்களில் துர்க்கை, வைஷ்ணவி, பிராமி ஆகிய சத்திகளை இரண்டாவது ஆவரணத்தில் (கர்ப்பக்கிரகச் சுவரின் வெளிக் கோட்டங்களில்) அமைத்து வழிபடப்பெறுவதை நாம் காண்கிறோம். இச்சத்திகள் இச்சை, ஞானக்கிரியா சத்தி களின் கூறுகளே ஆதலின் மேலே காட்டப்பட்ட மூன்று திருத் தாண்டகங்கள் துர்க்கை முதலிய சத்திகள் வணக்கத்துக்கும் உரியனவாம்.

## 24. வயிரவர் வணக்கம்

89. ஆதிக்கணான் முகத்தில் ஒன்று சென்று
அல்லாத சொல்உரைக்கத் தம் கைவாளால்
சேதித்த திருவடியைச் செல்ல நல்ல
சிவலோக நெறிவகுத்துக் காட்டுவானை,
மாதிமைய மா(து) ஒரு கூறாயினானை,
மாமலர்மேல் அயனொடு மாலுங்காணா
நாதியை, நம்பியை, நள்ளாற்றானை
நான் அடியேன் நினைக்கப்பெற்(று) உய்ந்தவாறே.

—6, 20, 1

ஆதிக்கணான்-'ஆதி பகவன்', வயிரவர் (காஞ்சிப்புராணம், வயிரவப்படலம், பா. 24 பார்க்க)

முகத்தில் ஒன்று-பிரமனது ஐந்து முகங்களில் ஒன்று;

அல்லாத சொல் உரைக்க-ஐந்து திருமுகங்களைக் கொண்ட சிவனோடு (சதாசிவரோடு) ஒத்தவனாய் நானும் ஐந்து திருமுகங் களை உடையேன் என்று தருக்கித் தகாத வார்த்தைகளைப் பிரமன் உரைக்க;

முகத்தில் ஒன்று தன் கைவாளால் சேதிக்க-அவ்வாறு தகாத சொல்லைச் சொல்லிய வாயைக் கொண்ட தலையைத் தனது வாளால் வயிரவப் பெருமான் வெட்டி வீழ்த்த.

நல்ல சிவயோக நெறி வகுத்துக் காட்டுவானை-இவ்வாறு வயிரவர் பிரமனது தருக்கை நீக்கி, அவன் நல்ல சிவயோக நெறியில் நிற்கும் வழியைக் காட்டியருளினார் என்ற வரலாறு குறித்தது.

நாதி-நாதன் என்பதன் பெண்பால்; இங்கு நள்ளாற்று இறைவ ராகிய தெர்ப்பாரண்யேசுவரரது சத்தியாகிய 'போகம் ஆர்த்த பூண்முலை' அம்மையை உணர்த்தி நின்றது.

நம்பி-நள்ளாற்று இறைவர்; தெர்ப்பாரண்யேசுவரர்.

அம்மையார் திருமுலைகள் இரண்டும் அபரஞானம், பரஞானம் ஆகிய இரண்டையும் உணர்த்தி நிற்பன: பிரமன் ''நான் சிவனை ஒப்பவன்'' எனத் தருக்கி நின்றது அவனது மயக்க அறிவினால், இந்த மயக்க அறிவைப் போக்கி அபரஞானத்தையும் சிவஞானத்தையும் வயிரவர் வாயிலாக பிரமனுக்கு அருளியது போகமார்த்த பூண்முலையம்மையே என்ற குறிப்பு இதனாற் காணப்பெறும்,

சிவயோக நெறி வகுத்தது-அபரஞானத்தை அருளியது.

காட்டியது-சிவத்தைக் காணும் சிவஞானத்தை அருளியது; இந்த இரண்டையும் உயிர்களுக்கு அருள்பவள் போகமார்த்த பூண்முலையாள். சிவஞானமே சிவபோகத்துக் காரணமாக இருப் பதால் அம்மையார் 'போகமார்த்த பூண்முலையாள்' ஆயினள்.

இந்தத் திருத்தாண்டகத்தில் சிவநிந்தனை செய்த பிரமனின் ஐந்து தலைகளில் ஒன்றை வயிரவர் சேதித்து, அவனை நான்முகன் ஆக்கிய வரலாற்றினை உணர்த்துவதன் மூலம் வயிரவர் போற்றப் படுகிறார். ஆதலின், இத்திருத்தாண்டகம் வயிரவர் வழிபாட் டுக்கு உரியதாகின்றது.

வயிரவர் அந்தகாசுரன் என்ற கொடிய அரக்கனை அழிக்கச் சிவபெருமானின் கூறாகத் (அம்சமாகத்) தோன்றிய மூர்த்தி என்று 'சிவபராக்கிரமம்' என்ற நூல் கூறுகிறது. சிவாலயங்களில் இவரரே காவல் தெய்வம். இரவில் அர்த்தஜாம பூசைக்குப் பிறகு வயிரவரைப் பூசித்துக் கோயிலைப் பூட்டி சாவியை அவர் கையில் ஒப்படைக்கும் வழக்கம் இருந்தது. வயிரவர் கோயில் காப்பவர் ஆதலின் இவர் க்ஷேத்திரபாலர் எனவும் சொல்லப்பெறுவர். (க்ஷேத்திரம்-தலம்; கோயில்; பாலர்-பிள்ளை)

வயிரவர்-பைரவர் என்ற வட சொல்லின் திரிபு. பைரவர் என்ற சொல் 'ப', 'ர', 'வ' என்ற மூன்று வேர் எழுத் துகளால் ஆனது. 'ப' என்பது 'பரன்' அல்லது பேரண்டத்தின் (cosmos) திதியையும், 'ர' என்பது 'ரவண' அல்லது பேரண் டத்தின் ஒடுக்கத்தையும், 'வ' என்பது 'வமன' அல்லது பேரண் டத்தின் தோற்றத்தையும் உணர்த்தி நிற்பன என்பர். (காஷ்மீர

க்ஷைவ ஆசிரியராகிய க்ஷேமராஜர் இவ்வாறு கூறுவதாகச் சொல்லப் படுகிறது). எனவே பைரவர் என்ற சொல் உலகுகளைப் படைத்தல், காத்தல், ஒடுக்குதல் ஆகிய மூன்று தொழில்களையும் செய்யும் கடவுளைக் குறித்து நிற்பது. பைரவருக்கும் சிவபெருமானுக்கும் வேறுபாடில்லை என்று 'விஞ்ஞான பைரவம்' என்ற தந்திரம் கூறுகிறது.

வயிரவமூர்த்தி சிவாலயங்களில் சிவபெருமான் எழுந்தருளியுள்ள கருவறையைச் (கரிப்பக்கிரகத்தைச்) சுற்றியுள்ள ஒரு பிராகாரத்தில் வைத்து வணங்கப்பெறுவர்.

## 24. முடிவுரை

இங்கே சிவாலய வழிபாட்டுக்குரிய 89 பாடல்கள் திருமுறைகளிலிருந்து திரட்டித் தரப்பட்டுள்ளன. எல்லாப் பாடல்களிலும் அருளாசிரியர்கள் அருளிச் செய்த திருமுறைப் பாடல்களே சிறந்தனவாதலின், அவையே ஆலயங்களிலும் இல்லங்களிலும் ஓதுதற்குரியன. ''சொல்லிபாட்டின் பொருள் உணர்ந்து சொல்'' லுதல் வேண்டும் என்பது மணிவாசகப் பெருமான் வகுத்த விதி. (சிவபுராணம், வரி 93). ஆதலின் திரட்டிய பாடல்களுக்குக் குறிப்புரையும், விளக்கவுரையும் கொடுக்கப்பட்டுள்ளன. ஆங்காங்கே திருமுறைப் பாடல்கள் உணர்த்தும் வடமொழி மந்திரங்களும் தரப்பெற்றுள்ளன. இப்பாடல்களும், வடமொழி மந்திரங்களும் கோயில் வழிபாட்டுக்கன்றி அன்பர்கள் தமது இல்லங்களில் நாள்தோறும் செய்யும் வழிபாட்டுக்கும் உரியன. அன்பர் தங்கள் வழியாடுகளில் இவற்றைப் பொருள் உணர்ந்து ஓதி எல்லா நலன்களையும் இறைவன் அருளால் பெறுவார்களாக.

வாழ்க அந்தணர்; வானவர் ஆன்இனம்;
வீழ்க தண்புனல்; வேந்தனும் ஓங்குக;
ஆழ்கதீயது; எல்லாம் அரன் நாமமே
சூழ்க; வையகமும் துயர் தீர்கவே.

—ஞானசம்பந்தர், திருப்பாசுரம், பா. 1.

விண்முகில் பொழிக; வேதம் விளங்குக; மறையோர் வாழ்க;
மண்முக அரசர் நீதி வளர்க; ஆள்இனங்கள் நல்க;
பண்முதல் நால்வர் பாடல் பதிதொறும் நிறைக; பார்மேல்
சண்முகர் அருளும் சைவ சமயமும் தழைக மன்றே.

—பழநித் தலபுராணம்

திருச்சிற்றம்பலம்

